CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும்
அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ

## ப்ரூக் பாண்ட் நிபுணர்களால் பக்குவம் செய்யப்பட்டிருப்பதே அது சிறந்து விளங்கக்காரணம்




★க்ரஷ், டியர், கர்ல் — இந்த தனிப்பட்ட டீ தயாரிக்கும் முறையானது விரைவில் கரையவும், மிகுந்த தேயிலைச்சத்துக் கிடைக்கவும் உறுதியளிக்கிறது.



## உங்களுக்கு மட்டுமே உரிமை!

இதுதான் ஸ்டேட் பாங்க் பாதுகாப்பு டெபாசிட் லாக்கரின் சாவி. உங்கள் ஒருவரிடம் தான் இருந்துவரும்—வேறு சாவி கிடையாது. ஸ்டேட் பாங்க் பாதுகாப்பு டெபாசிட் லாக்கர் ஒன்றை வாடகைக்கு எடுங்கள் (எங்கள் பெரிய கிளைகள் எதனிலும் இவ் வசதி கிடைக்கும்) உங்கள் நிதிகள் பத்திரமாக இருக்கட்டும். உங்கள் மனத்திலே நிம்மதி நிலவட்டும். பத்திரங்கள், செல்வ உடைமைகள் யாவற்றுக்கும் பந்தோபஸ்தான பாதுகாப்பு வசதிகளும் சொற்பக் கட்டணத்தில் கிடைக்கின்றன.

# சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்

S. 372 TM



# கல்கி

## பொருளடக்கம்



சாதாரண. ஆனி. 7 :: 1970, ஜூன், 21



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |


இங்கிலாந்தில் செய்தது
இந்தியா
அன்று!


இந்தியாவிலேயே செய்தது
இந்தியப் பிரஜை
இன்று!
PK



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 29 ● இதழ் 47



# இயற்கையின் நியதிகள்

பிரபஞ்சம் இயற்கையான சில நியதிகளுக்கு உட்பட்டது. அவற்றை நம்மால் மாற்ற இயலாது. இயற்கை நியதிகள் எவை என்பதை விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவற்றைப் பயன்படுத்திக் கொண்டு மோட்டார் வண்டிகள், எஞ்ஜின்கள் போன்ற பயனுள்ள சாதனங்களைத் தொழில் திறனாளர் தயாரிக்கின்றனர். சமூகவியல், பொருளாதாரம் ஆகியவையும் இயற்கையின் நியதிகளுக்கு உட்பட்டவையே. மனிதர்களின் நோக்கங்களும், நடவடிக்கைகளும் இயற்கை நியதிகளுக்குக் கட்டுப்பட்டவையே. பணப் புழக்கம் அதிகரித்தால் விலைகள் உயரும் என்பதும் இவை போல் ஓர் இயற்கையான நியதி. ஒரு பொருளுக்குள்ள தேவை அதன் விலையைப் பாதிக்கிறது. அதிக உற்பத்திக்கு ஊக்கம் அளிக்காமல் வரிகள் மட்டும் கடுமையாக இருந்தால் உற்பத்தி குறையத்தான் செய்யும். இதுவும் இயற்கை நியதியே. இயற்கையின் விதிகளுக்கு மாறாக நடந்து கொண்டு விலைகளைச் செயற்கை முறையில் குறைக்க முற்பட்டால், உழைப்பில் மக்கள் அக்கறை கொள்ளாது போய் விடுகின்ற நிலைதான் மிஞ்சும். போதிய ஊக்கம் அளிக்காமல், உழைக்குமாறு மக்களை நிர்ப்பந்திக்க முடியாது. ''ஃப்ரீமேன்''— என்ற பத்திரிகையில் ஸ்ரீ டென்டன் கூறியபடி இயற்கையின் பௌதிக விதிகளை ராஜதந்திரிகள் மறுக்காமல் ஏற்றுக் கொள்கின்றனர். ஆனால் மனிதனது நடத்தையை ஒழுங்குபடுத்தும் இயற்கை நியதிகளை ஏற்றுக் கொள்ள அவர்கள் தயங்குகின்றனர்.

சுறுசுறுப்பான தமது உழைப்பின் காரணமாகவே சீன மக்கள் பெரிய சமுதாயத்தினராக விளங்குகிறார்கள். சுறுசுறுப்புடன் உழைக்காத மக்கள் உயர்நிலை அடைய முடியாது. உழைக்க வேண்டும் என்ற உணர்வை மக்களிடையே தலைவர்கள் வளர்ப்பார்களாயின் அது நல்ல சேவையாக அமையும். உண்மையாக உழைக்காமல், எந்தத் திறமையையும் வெளிப்படுத்தாமல் பிறரது பணம் தம் கைக்கு வந்து சேரவேண்டும் என்ற மனப்பான்மையை வளர்ப்பவர்கள் உண்மையில் மக்களுக்குத் தீங்கு இழைப்பவர்களே. நம் தேசத்தில் இம்மாதிரியான கெடுதலையே லாட்டரிகள் விளைவித்து வருகின்றன. மற்றபடி மக்களுக்கு என்ன நன்மை செய்த போதிலும், லாட்டரித் தீமையின் மூலம் அவை அடிபட்டுப் போகின்றன. நாம் மனத் தூய்மையுடன் பிரார்த்தனை செய்தால் தவறான வழிகளை மக்கள் மாற்றிக் கொள்வர் என்று ஹிந்து சாஸ்திரங்கள் கூறுகின்றன. எனவே, தமிழ் நாடு அரசு, தன் மனத்தை மாற்றிக் கொண்டு இந்த லாட்டரிகளைக் கைவிட்டுப் பிற மாநிலங்களுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன்.

நாம் எவ்வளவோ முட்டாள்தனமான காரியங்களைச் செய்து வருகிறோம். அவை போதாவென்று அணு குண்டுகளைத் தயாரிக்கும் மதியீனத்தில் இறங்குவோமானால், அந்தக் குண்டுகளைக் கண்டு பிறர் பயப்படுவதற்கு முன்னர் நம்மை நாமே அழித்துக் கொண்டு விடுவோம். மற்றவர்கள் அணு ஆயுதம் தயாரிப்பதால் நாமும் அதில் ஈடுபடுவதற்குப் பதில், இந்தக் குண்டுகளைக் கைவிடுமாறு மற்றோரையும் விடாமல் வற்புறுத்தி வருவோமாக. இந்தியாவுக்குரியது இத்தகைய சமாதானப் பணியே.

எல்லா வகையான அணு குண்டு வெடிச் சோதனைகளுமே தீமை விளைவிப்பவை. அமெரிக்க — ரஷ்ய உடன்பாட்டை மீறி பிரான்ஸ் சோதனைகளை நடத்தியிருப்பது பெருங்குற்றம். தென் பசிபிக் சமுத்திரத்தில் பிரான்ஸ் நடத்திய சோதனையின் விளைவாகவே பெரு நாட்டில் பூகம்பம் விளைந்ததோ என்ற சந்தேகம் சிலருக்கு இருந்து வருகிறது. அமெரிக்காவோ அல்லது பிற நாடுகளோ பூமிக்கடியில் நடத்திய சோதனைகளின் விளைவாக இந்தப் பூகம்பம் ஏற்பட்டிருப்பது சாத்தியமே.

(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியது.)

# என்ன சேதி?

## வங்கக் கவர்னரின் உரை

வங்கத்தின் கவர்னர் திரு தாவன் தமது எல்லை மீறிப் பேசி, கல்கத்தா வழக்கறிஞர்கள், ஏன், பாரதத்தின் வழக்கறிஞர்கள் ஆகியோரின் பெரும் கசப்பையும் வெறுப்பையும் தேடிக் கொண்டிருக்கிறார்.

திரு தாவனே நீதிபதியாக இருந்தவர். அவர், தாம் பாரதக் குடியரசின் ராஷ்டிரபதியின் பிரதிநிதி என்பதை மறந்து, சாதாரண அரசியல் பிரசாரகன் போல் பேசித் தமது பதவிக்கே பெரும் அவமானத்தையும் தம்மை அந்தப் பதவியில் அமர்த்தியவர்களைப் பற்றித் தவறான எண்ணமும் உண்டாக்கி யிருக்கிறார்.

நீதிமன்றத்தின் தலைமை நீதிபதிக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைக்க வேண்டிய கடமை கவர்னர் பதவி வகிப்பவர்களுக்கு ஏற்பட்ட ஒன்று. கல்கத்தா நீதிபதிக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைக்கும் நிகழ்ச்சியின்போது இந்திய வழக்கறிஞர்களைப் பழித்தும் நீதிபதிகளைத் தூஷித்தும், டில்லி உயர்நீதி மன்றத் தீர்ப்புகளைக் கண்டித்தும் பேசியிருக்கிறார். அத்துடன் நின்றால் தேவலையே! அதற்குமேல் ஒரு படி போய் எதேச்சாதிகார ஒரு கட்சியாட்சி நடக்கும் கம்யூனிஸ்ட் ருஷ்யாவின் நீதி மன்றங்களையும் வழக்கறிஞர்களையும் நீதி நிர்வாகத்தையும் புகழ்ந்து பேசியிருக்கிறார். திரு தாவனுக்கு உண்மையில் ஜனநாயகத்தில் நம்பிக்கை உண்டா என்றே மக்களுக்குச் சந்தேகம் எழுந்துள்ளது.

## பம்பாயில் முருகன் கோயில்

கடந்த இருபத்தி ஐந்து வருடங்களாக பம்பாய் மாதுங்கா பகுதியில் ஸ்ரீ சுப்பிரமணிய சமாஜம் முருகன் வழிபாட்டில் ஈடுபட்டு, ஸ்கந்த சஷ்டி, தைப் பூசம், பங்குனி உத்திரம் முதலிய உற்சவங்களை வெகு விமரிசையாகக் கொண்டாடி வருகிறது. தற்போது பம்பாயில் வசிக்கும் பல்லாயிரக் கணக்கான பக்தர்களின் வேண்டுகோளின்படி ஓர் அழகிய கோயிலைக் கட்டுவதற்கு ஸ்ரீ சுப்பிரமணிய சமாஜம் முயன்று வருகிறது. தமிழகத்திலிருந்து சிற்பக் கலை வல்லுநர்களை அழைத்துக் கோயில் திருப்பணியை விரைவில் தொடங்க இருக்கிறார்கள். கோயிலில் விநாயகர், முருகன், ஐயப்பன் ஆகிய மும்மூர்த்திகளையும் பிரதிஷ்டை செய்ய விருக்கிறார்கள். கோயிலோடு எல்லா வசதிகளும் கொண்ட ஓர் அழகிய கல்யாண மண்டபமும், தெய்விக நூல்களைக் கொண்ட ஒரு சிறந்த வாசகசாலையும் அமையும். மேலும் தேவாரம், திருப்புகழ் வகுப்புகளும் நடைபெறும். ஆஸ்திகப் பெருமக்கள் இந்தத் திருப்பணிக்குத் தாராளமாக உதவ வேணும். கோயிலுக்கு நிலமாகக் கொடுக்க விரும்புகிறவர்கள் குறைந்தது ஒரு சதுர கெஜத்தின் விலையான ரூ. 51ஐக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பலாம்.

ஸ்ரீ சுப்பிரமணிய சமாஜம், 1, மனோதா பவன், சந்தாவர்கர் கிராஸ்ரோடு, மாதுங்கா பம்பாய்—19.

## பெண்கள் பஸ்

சென்னை நகரில் பெண்களுக்கென்று பிரத்தியேக பஸ்கள் விடச் சென்னை அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. பஸ்களில் தாய்க்குலத்தினர் பட்டுவந்த பாட்டை உணர்ந்தவர்கள், இதனை முழு மனத்துடன் வரவேற்பார்கள். இப்பொழுதெல்லாம் ஆண்களும் பெண்களும் ஆபீஸ்களுக்குச் செல்வது என்று ஏற்பட்டு விட்டது. மனைவியும் சம்பாதித்தால்தான் குடும்பம் நடத்த முடியும் என்றளவுக்கு இன்றைய பொருளாதார நிலை அமைந்திருக்கிறது. ஆகவே, ஆபீஸ் நேரங்களில் ஆண்களோடு பெண்களும் பஸ்களில் முட்டி மோதிக் கொண்டு ஏற வேண்டிய துர்ப்பாக்கிய நிலை இனி இராது என்று கருதுகிறோம். குழந்தைகளுடன் வரும் தாய்மார்கள், பஸ்ஸில் ஏற முடியாமலும், ஏறினாலும் உட்கார இடமில்லாமல் குழந்தையுடன் தள்ளாடிக் கொண்டே நிற்பதுமாகிய பரிதாபக் காட்சிகள் கண்களில் படாது என்று நினைக்கிறோம். அப்படியே கல்லூரிகளுக்குச் செல்லும் மாணவிகளும் இந்தப் புதிய ஏற்பாட்டை மனமார வரவேற்பார்கள் என்று நினைக்கிறோம்.

## சங்கரராம் மறைவு

திரு சங்கரராம் அவர்கள் தமது முது பெரும் பிராயத்தில் (73) மறைந்தது தமிழ் எழுத்துலகுக்கு ஒரு பெரும் நஷ்டமாகும்.

திரு சங்கரராம் அவர்கள் ஆங்கிலத்தின் மூலமாகத் தமிழ் எழுத்துலகில் பிரவேசித்தவர். அவர் முதலில் ஆங்கிலத்தில்தான் எழுதத் தொடங்கினார். தஞ்சை மாவட்டத்தின் காவேரிநதிக்கரையில் வாழும் மக்களின் சூழ்நிலையைப் பிரதிபலிக்கும் அவரது கதைகளை ஆங்கிலத்தில் படித்தவர்கள் தமிழில் வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று கருதினார்கள். அவற்றை அவரே தமிழில் எழுதினார். தமிழ்க் கதைகள் அவரது ஆங்கிலக் கதைகளைவிடச் சிறப்பான இலக்கியம் நயங்கொண்டு திகழ்ந்தன. அதுமுதல் அவர் நிரந்தரத் தமிழ் எழுத்தாளர் ஆனார். பல கதைகளும் நவீனங்களும் எழுதினார். அவர் நடையில் தனி விசேஷம் என்னவென்றால், தஞ்சை மாவட்டத்தின் மண்வாசம் அதில் வீசும். ''மண்ணாசை'' அவரது சிறந்த நாவல்களில் ஒன்று. அவரது குடும்பத்தினருக்கு நம் ஆழ்ந்த அனுதாபங்கள்.




நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்துக்குக் கிடைக்கக் கூடிய வெளிநாட்டு உதவியில் பாதிக்கு மேற்பட்ட தொகை ஏற்கனவே வாங்கியிருக்கும் அந்நியக் கடன்களுக்கு வட்டியாகக் கொடுக்கப்பட வேண்டும். அதாவது 4,130 கோடியில் ரூ. 2,560 கோடி இவ்வாறு செலவழிந்து போகும். தவறான தொழில் கொள்கைகளைப் பின்பற்றியது, கண்மூடித்தனமாக அயல்நாடுகளிடம் கடன் வாங்கியது; அந்தக் கடன் தொகைகள் விடுமுதலான சர்க்கார் தொழில்களில் ஏற்பட்ட நிர்வாக ஊழல்கள் ஆகியவற்றின் தவிர்க்க முடியாத விளைவே இந்த நிலை.

★

ஆங்கிலத்தில் பயிற்சியளிக்கும் பள்ளி வகுப்புக்களில் மாணவர்களைச் சேர்ப்பதற்குக் கடுமையான போட்டி இருக்கிறது என்று 'ஹிந்து' பத்திரிகை கூறுகிறது. அதன் நிருபர் எழுதுகிறார் :

''இவ்வாண்டு ஹைஸ்கூல்களில் ஆறுவது வகுப்புக்கு மாணவர்களைச் சேர்த்துக் கொள்வது அநேகமாக முடிவடைந்து விட்டது. இதில் குறிப்பிடத்தக்க இரண்டு போக்குகள் தென்படுகின்றன. தமது குழந்தைகள் ஆங்கிலத்தின் மூலம் பயில வேண்டும் என்று விரும்பும் பெற்றோர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது; இவர்களில் ஏழை வர்க்கத்தினர் அதிகமாயிருக்கிறார்கள். சென்ற வருஷத்தைவிட இவ்வாண்டு ஆங்கில மீடியம் கோருவோர் ஐந்தில் ஒரு பங்கு கூடுதலாகி யிருக்கிறார்கள்.''

ஆங்கிலத்தில் பயிற்சி நடக்கும் பிரிவுகளில் சேருவதற்குப் பல நிர்ப்பந்தங்களைத் தமிழக அரசு விதித்துள்ளது. பெற்றோர்களது நிர்ப்பந்தத்தின் காரணமாக இந்த விதிகளில் சில மாற்றியமைக்கப்பட்டுள்ளன. எனினும், நிலைமை இன்னும் அதிருப்திகரமாகவே இருந்து வருகிறது. தமிழின் அபிவிருத்திக்காகச் சிறந்த முறையில் பாடுபட மாநில அரசுக்கு உரிமை உண்டு. ஆனால் அடுத்த தலைமுறையில் சிறப்புப் பிரிவினராக இருக்க வேண்டியவர்கள் மீது விலங்குகளைத் தரிப்பது தற்கொலைக்குச் சமமாகும். இந்தக் கொள்கையைச் சர்க்கார் பின்பற்றுவாகாது. ஆங்கிலத்தில் அபிவிருத்தி அடைய முடியாதபடி மட்டம் தட்டினால் பிற சர்வ கலாசாலைகளில் மேல் படிப்புக்குச் செல்ல முடியாது; தக்க வேலைவாய்ப்புக்களை நாடித் தேசத்தின் பிற பகுதிகளுக்கும் செல்ல இயலாது போய் விடும். நமது இளைஞர்களை இம்மாதிரி தகுதி யற்றவர்களாக்குவது தற்கொலைக்குச் சமமாகும்.

★

மார்க்கெட் நிலவரத்தைவிடக் குறைந்த விலையில் உணவு தானியங்களைப் பெருநகர்களில் உள்ள ஏழை மக்களுக்குச் சப்ளை செய்கின்ற பொறுப்பைச் சர்க்கார் தொடர்ந்து வகிக்க வேண்டுமாயின், ஏராளமான சரக்கு அதனிடம் கையிருப்பில் இருக்க வேண்டும். உச்சவரம்புச் சட்டங்களின்படியும், இயற்கையான பாகப் பிரிவினைகள் மூலமும் எல்லாப் பண்ணைகளுமே மிகச் சிறியவையாகிவிட்டால், அதன் விளைவாகச் சிறுசிறு நில உடைமையாளரிடம்கூடக் கட்டாயக் கொள்முதலைச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படும். சில்லறை ஊழல்களும் அதிகாரிகளின் கொடுமையும் இதனால் வளரத்தான் செய்யும். குடியானவர்களது தானியங்கள் உற்பத்திக் கோரும் விலைவிகிதங்களில்தான் சர்க்காரின் கொள்முதல் நடைபெற வேண்டியிருக்கும். இதன் விளைவாக, மானியமளித்து நகர்ப்புற வாசிகளுக்கு மலிவுவிலையில் விற்று வரும் ஏற்பாட்டை அமலாக்க முடியாமற்போகும்.

★

கம்யூனிஸ்ட்களின் நில ஆர்ஜிதத் திட்டம் பற்றி 'ஹிந்து' கூறுவதாவது: ''தமிழ் நாட்டின் வலது கம்யூனிஸ்ட் கட்சியானது, ஆகஸ்ட் பதினைந்தாந் தேதி பெரிய நிலச் சுவான்தார்கள், பண்ணையார்கள் ஆகியோரிடமிருந்து 'சட்ட விரோதமாக'ப் பெறப்பட்ட சர்க்கார் புறம்போக்கு நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொள்கின்ற திட்டத்தை நடத்தி வைப்பதற்காக ஓர் உயர்நிலைக் குழு அமைத்துள்ளது. இதற்குப் பூர்வாங்கமாக ஜூலை முதல் தேதி ராஜ்யம் முழுவதும் ஆர்ப்பாட்டம் நடைபெறும் என்று தமிழ்நாடு கிஸான் சபாக் காரியதரிசி திரு எம். ஆதி மூலம் பத்திரிகையாளரிடம் கூறினார். ஆகஸ்ட் 15ல் நடைபெறும் நில ஆர்ஜித இயக்கத்துக்கு முன்பு மாவட்டம் தோறும் ஆகஸ்ட் 9லிருந்து கட்சித் தொண்டர்கள் பாத யாத்திரை செய்வர்.''

மேலே கூறியவற்றை அநுமதித்தால், அது சர்க்காருக்கு இணையாக இன்னொரு சர்க்கார்நடத்த அநுமதி தந்தாற்போலாகும். இன்றைய சர்க்கார் மக்களுக்குத் தன் கடமையை ஆற்றவில்லை என்று கம்யூனிஸ்ட்கள் கருதினால், தேர்தல் மூலம் இச் சர்க்காரை அகற்றுவதற்கு முயல வேண்டும். அப்படியல்லாது, சட்டத்தை மீறுவதற்கே ஒரு திட்டம் வகுத்து நிறைவேற்றுவது தகாது. இவ்விதம் செய்வது அப்பட்டமான அராஜகமாகும்.



# போட்டோ பிடிக்க மிகச் சிறந்த காமிரா ஆக்பா க்ளிக் III

தொடங்கவும், தொடர்ந்து படமெடுக்கவும் தயாரானது!

- கையாளுவது எளிது. எதையும் அட்ஜஸ்ட் செய்யவேண்டிய அவசியமில்லை.
- ஒவ்வொரு 120 ரோல் பிலிமிலும் 12 பெரிய (6 x 6 செ.மீ.) படங்கள் எடுக்கலாம்.
- தனி விலைக்கு வசதியான லெதர் கேஸ், ஏ 1 ப்ளாஷ் கன் மற்றும் போர்ட்ரெய்ட் லென்ஸ் கிடைக்கும்.

மேலும் சிறந்த ஒன்று வேண்டுமா? ஆக்பா க்ளிக் IV வாங்குங்கள். மங்கலான வெளிச்சத்திலும்கூட பிரகாசமான படங்களை எடுக்க இதில் தனிப்பட்ட அக்ரோமேட் F 8.8 லென்ஸ் பொருத்தப்பட்டுள்ளது. விலை ரூ. 62.50 (வரிகள் தனி)

பளபளப்பான பிரிண்டுகளுக்கும் என்லார்ஜ்மென்டுகளுக்கும், ஆக்பா போட்டோ பேப்பரையே வாங்குங்கள்.

அங்கீகாரம் பெற்ற எல்லா ஆக்பா வியாபாரிகளிடமும் கிடைக்கின்றன.

ஆக்பா கேவார்ட் கூட்டுறவுடன் தயாரிப்போர்:
தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா.



ரூ. 46.50 (வரிகள் தனி)




ஏகபோக விநியோகஸ்தர்கள்:
ஆக்பா கேவார்ட் இந்தியா லிமிடெட்
பம்பாய், புது டில்லி, கல்கத்தா, சென்னை





® இது போட்டோகிராபி பொருள்களைத் தயாரிக்கும் ஆக்பா கேவார்ட், ஆண்ட்வர்ப்-லெவர்குஸன்-ன் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்.

ஆக்பா க்ளிக்–இந்தியாவில் மிகவும் பிரபலமான காமிரா.

CMAG-139-203 Tam

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி



## மூன்றும் அத்தியாயம்

## பருந்தும் புறவும்

ஆதித்தகரிகாலன் சுட்டிக் காட்டிய திசையில் ஆற்றங்கரை மண்டபம் ஒன்று இருந்தது. அது கல் வேலையினால் ஆன மண்டபம். வழிப்போக்கர்கள் வெய்யிலிலும் மழையிலும் தங்குவதற்காக யாரோ தர்மவான் அதைக் கட்டியிருக்க வேண்டும். அந்த மண்டபம் வெய்யிலிலும் மழையிலும் வெகு காலம் அடிபட்டு முதுமையின் அறிகுறிகளைக் காட்டிக் கொண்டிருந்தது. மண்டபத்தின் மூலைகளில் சிற்ப வேலைப்பாடு உடைய உருவங்கள் சில காணப்பட்டன. அவை இன்னவை என்று கிழவராகிய மலையமானுக்குத் தெரியவில்லை.

''பார்த்தீர்களா தாத்தா!'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''குழந்தாய்! அந்த மண்டபத்தைத்தானே சொல்கிறாய்? அதில் வேறு ஒன்றும் எனக்குத்

தெரியவில்லையே? மண்டபமும் வெறுமையாகத்தான் இருக்கிறது. அதில் யாரும் இருப்பதாகக் காணவில்லையே!'' என்றார்.

''தாத்தா! உங்களுக்கு வயதாகி விட்டது என்று இப்போதுதான் எனக்கு நன்றாய்த் தெரிகிறது. அதனால் கண் பார்வை குன்றி யிருக்கிறது. அதோ பாருங்கள். ஒரு பெரிய இராஜாளி! எத்தனை பெரிது? அதன் சிறகுகள் எவ்வளவு விசாலம்? கொடுமை! கொடுமை! அது தன் கால்களில் ஒரு சின்னஞ் சிறு புறாவைப் பிடித்துக் கொண்டிருக்கிறதே, தெரியவில்லையா? இராஜாளியின் கூரிய நகங்கள் கிழித்துப் புறாவின் இரத்தம் சிந்துகிறதே, தெரியவில்லையா? கடவுளே! இது என்ன விந்தை! அதோ இன்னொரு புறாவைப் பாருங்கள், தாத்தா! அந்தப் பயங்கரமான இராஜாளியின் அருகில் வட்டமிடுகிறது! அது இராஜாளியிடம் எப்படிக் கெஞ்சுகிறது? இராஜாளியின் கால்களில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் புறா அதனுடைய காதலனாக இருக்க வேண்டும்! காதலனுக்கு உயிர்ப் பிச்சை கொடுக்கும்படி அது கெஞ்சுகிறது! தாத்தா! அந்தப் புறா கெஞ்சுகிறதா? அல்லது இராஜாளியிடம் சண்டைக்குப் போகிறதா? இறகை அடித்துக் கொள்வதைப் பார்த்தால் சண்டைக்குப் போவதாகவே தோன்றுகிறது. கடவுளே! அந்தப் பெண் புறாவுக்கு என்ன தைரியம் பாருங்கள்! இராஜாளியுடன் சண்டைக்குப் போகிறது. காதலனுடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக அந்தப் பயங்கர ராட்சதனுடன் போராடப் போகிறது! தாத்தா! இராஜாளி மனம் இரங்கும் என்று நினைக்கிறீர்களா? இரங்காது! இரங்காது! ஒரு நாளும் இரங்காது! இம்மாதிரி எத்தனையோ புறாக்களை அது கொன்று தின்று கொழுத்துக் கிடக்கிறது! சண்டாள இராஜாளியே! இதோ உன்னைக் கொன்று போடுகிறேன்!'' என்று கூறிக் கொண்டே ஆதித்த கரிகாலன் பக்கத்தில் கிடந்த ஒரு கூழாங் கல்லை எடுத்து விசி எறிந்தான். அந்தக் கூழாங்கல் மண்டபத்தை நோக்கிச் சென்று அதன் ஒரு மூலையில் பட்டு விட்டுக் கீழே விழுந்தது.

ஆதித்த கரிகாலன், ''ராட்சதனே! உனக்கு நன்றாய் வேண்டும்!'' என்று சொல்லிவிட்டு, இடி இடி என்று பயங்கரமாகச் சிரித்தான்.

பேரப் பிள்ளையின் சித்த சுவாதீனத்தைப் பற்றி ஏற்கனவே கிழவருக்குச் சிறிது சந்தேகம் இருந்தது. அது இப்போது இன்னும் அதிகமாயிற்று.

'' தாத்தா ! ஏன் என்னை இப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்? மண்டபத்தின் அருகில் போய்ப் பாருங்கள்!'' என்றான் கரிகாலன்.



அவ்விதமே மலையமான் மண்டபத்தைச் சற்று நெருங்கிச் சென்று கரிகாலனின் கல் விழுந்த இடத்தை உற்றுப் பார்த்தார். அங்கே ஒரு சிற்பம் காணப்பட்டது. அந்தச் சிற்பத்தில் இராஜாளி ஒன்று தன் கால் நகங்களில் ஒரு புறாவைக் கொத்தித் தூக்கிக் கொண்டிருப்பது போலவும், இன்னொரு புறா அந்த இராஜாளியின் மீது கோபத்துடன் பாயப் போவது போலவும் தத்ரூபமாக அமைக்கப்பட்டிருந்தது.

மலையமான் திரும்பி வந்து, ''குழந்தாய்! எனக்கு வயதாகி விட்டது என்பது உண்மைதான்! கண் பார்வை முன்போல் துல்லியமாக இல்லை. அருகில் சென்று உற்றுப் பார்த்த பிறகுதான் தெரிந்தது. நல்ல சிற்ப வேலை!'' என்றார்.

''நல்ல சிற்ப வேலையா? சிற்ப அற்புதம் என்று சொல்லுங்கள். தாத்தா;

மகேந்திர வர்மர் — மாமல்லர் காலத்துச் சிற்பச் சக்கரவர்த்தி யாரோ ஒருவன் இதையும் செய்திருக்க வேண்டும்! முதலில் பார்த்ததும் உண்மையாகவே நடப்பது போலவே எனக்குத் தோன்றி விட்டது!'' என்றான் கரிகாலன்.

''ஆதித்தா! அற்புதம் அந்தக் கல்லிலே மட்டும் இல்லை! உன் கண்ணிலும் இருக்கிறது; உன் மனத்துக்குள்ளேயும் இருக்கிறது; இந்த வழியாக எவ்வளவோ பிரயாணிகள் தினந்தோறும் போகிறார்கள். அவர்களில் முக்கால்வாசிப் பேர் இந்தச் சிற்ப அற்புதத்தைக் கவனித்துக்கூட இருக்க மாட்டார்கள். மற்றும் பலர் பார்த்தும் பார்க்காதது போலவே போய்விடுவார்கள். உன்னைப் போல் ஒருசிலர்தான் ஒரு சிற்பத்தைப் பார்த்துஇவ்வளவு ஆச்சரியப்படுவார்கள்..''

''நான் ஆச்சரியப் படவில்லை, தாத்தா! கோபப்படுகிறேன். அந்தச் சிற்பத்தை இப்போதே இடித்துத் தள்ளிவிட வேண்டுமென்று எனக்கு ஆத்திரம் உண்டாகிறது. இவ்வளவு கொடூர



மான சிற்பத்தை அமைத்தவனை அதிக மாகப் புகழ்ந்து பாராட்டுவதுகூட எனக்குப் பிடிக்கவில்லை!...''

''கரிகாலா! இது என்ன விந்தை! உன்னுடைய வைர நெஞ்சு எப்போது இவ்வளவு இரக்கம் கொடுத்தது? இராஜாளி புறாவைக் கொன்று தின்பது அதனுடைய இயற்கை. சிங்க ராஜா ஆட்டினிடம் இரக்கம் கொள்ள ஆரம்பித்தால் அது சிங்க ராஜா அல்ல; அதுவும் ஆடாகத்தான் போய்விடும். சிம்மாசனத்தில் வீற்றிருந்து அரசு புரிய ஆசைப்படுகிறவர்கள் பகைவர்களையும் சதிகாரர்களையும் கொன்றுதான் ஆக வேண்டும். சக்கரவர்த்தியாயிருந்து உலகை ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவர்கள் பகையரசர்களைக் கொன்றுதான் தீர வேண்டும். இராஜாளி புறாவைக் கொல்லா விட்டால், அது இராஜாளியாயிருக்க முடியுமா? இதைப் பற்றி ஏன் உனக்கு இவ்வளவு கலக்கம்?'' என்றார் மலையமான்.

''தாத்தா! நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான்! ஆனால் அந்தப் பெண் புறு அப்படித் தவிப்பதைப் பார்த்த பிறகு இராஜாளிக்கு இரக்கம் வரவேண்டாமா? பெண்ணுக்கு இரங்கி ஆணை விடுதலை செய்ய வேண்டாமா? ஐயா! நீங்களே சொல்லுங்கள். உங்கள் பகைவன் ஒருவனை நீங்கள் கொல்லப் போகும் சமயத்தில் அவனுடைய காதலி குறுக்கே வந்து புருஷனுக்கு உயிர்ப் பிச்சை கேட்டால் என்ன செய்வீர்கள்? அப்போது உங்கள் மனம் இரங்காமல் இருக்குமா?'' என்று கரிகாலன் கேட்டான்.

''அப்படி ஒரு பெண் குறுக்கே வந்தால் அவளை என் இடது காலினால் உதைத்து விட்டு என் பகைவனைக் கொல்லுவேன்! கரிகாலா! அதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. பகைவர்கள் 'தொழுத கையினில் ஆயுதம் வைத்திருப்பார்கள்' என்றும், அவர்கள் 'அழுத கண்ணீரிலும்' ஆயுதம் மறைந்திருக்கும் என்றும் வள்ளுவர் கூறியிருக்கிறார். ஆண்களின் கண்ணீரைக் காட்டிலும் பெண்களின் கண்ணீர் அபாயமானது. ஏனெனில் பெண்களின் கண்ணீருக்கு இளகச் செய்யும் சக்தி அதிகம் உண்டு. அப்படி மனத்தை இளக விட்டு விடுகிறவனால் இவ்வுலகில் பெரிய காரியம் எதையும் செய்ய முடியாது. அவன் பெண்களிலும் கேடு கெட்டவனாவான்!''

''தாத்தா! இது என்ன? பெண்களைப் பற்றி ஏன் நீங்கள் இவ்வளவு குறைவாகப் பேசுகிறீர்கள்! பெண்களைப் பற்றிக் குறைவாகப் பேசுவது என் தாயாரையும் குறைவுபடுத்துவதாகாதா?''

''குழந்தாய் கேள்! உன் தாயாரிடம் நான் வைத்திருந்த அன்புக்கு இந்த உலகத்தில் இணை ஒன்றுமே இல்லை. எனக்கு ஆறு மகன்கள் பிறந்தார்கள். பீமனையும், அர்ச்சுனனையும் ஒத்த வீரர்களாய் வளர்ந்தார்கள். அவ்வளவு பேரையும் யுத்த களத்தில் பலி கொடுத்து விட்டேன். அவர்கள் இறந்த செய்தி வந்தபோதெல்லாம் நான் வருத்தப்படவில்லை. ஆனால் உன் தாயாரை மணம் செய்து கொடுத்து அனுப்பி வைத்தபோது அவள் சாம்ராஜ்ய சிங்காதனத்தில் அமரப்போகிறாள் என்று தெரிந்திருந்தும் என் மனம் அடைந்த வேதனையைச் சொல்ல முடியாது. ஆனால் அந்த வேதனையை வெளிப்படையாகக் காட்டிக்கொண்டேனா? இல்லை! அவளிடம்தான் வெளியிட்டேனா? அதுவும் இல்லை! உன் தாயை மணம் செய்து கொடுப்பதற்கு முதல் நாள் அவளைத் தனியாக அழைத்து என்ன சொன்னேன் தெரியுமா? கேள், கரிகாலா! 'மகளே! மாநிலம் புரக்கப் போகும் மன்னனை நீ மணந்துகொள்ளப் போகிறாய். அதற்காகக் கர்வம் கொள்ளாதே! மன்மதனையொத்த சுந்தர புருஷனை நீ மணந்துகொள்ளப் போகிறாய்! அதற்காகவும் நீ கர்வம் அடையாதே! அவ்வளவு புகழ் வாய்ந்த கணவனை மணந்து கொள்வதனால் உனக்குக் கஷ்டந்தான் அதிகமாக இருக்கக்கூடும். உன் அரண்மனையில் பணிசெய்யும் பணிப் பெண்கள் பலரும் உன்னைக் காட்டிலும் சந்தோஷமாக இருப்பார்கள். துக்கப் படுவதற்கும் வேதனைப்படுவதற்கும், உன்னை நீ ஆயத்தம் செய்துகொள்! உனக்குக் குழந்தைகள் பிறக்காவிட்டால் உன் புருஷன் வேறு ஸ்திரீகளைக் கட்டாயம் மணந்து கொள்வான். அதை நினைத்து நீ வேதனைப்படக் கூடாது. உனக்கு மக்கள் பிறந்தால் அவர்களை வீர மக்களாய் நீ வளர்க்க வேண்டும். அவர்கள் போர்க்களத்தில் உயிர் விட்டதாகச் செய்தி வந்தால் ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடக் கூடாது. உன் கணவர் சந்தோஷமாக இருந்தால் நீயும் சந்தோஷமாக இரு! உன் புருஷன் துக்கப்பட்டால் நீ அவனைச் சந்தோஷப் படுத்தப் பார்! உன் பதி நோய்ப்பட்டால் நீ அவனுக்குப் பணிவிடை செய்! உன் கணவன் இறந்தால் நீயும் அவனுடன் உடன்கட்டை ஏறிவிடு! உன் நெஞ்சில் உதிரம் கொட்டினாலும் உன் கண்களில் மட்டும் கண்ணீர் கொட்டக் கூடாது! மலையமான் வம்சத்தில் பெண்களுடைய குலாசாரம் இது என்று இவ்

விதம் உன் அன்னைக்குப் புத்திமதி கூறினேன். அம்மாதிரி உன் அன்னை இன்றுவரை நடந்து வருகிறாள்; நடத்தி வருகிறாள். கரிகாலா! உன்னையும் உன் சகோதரனையும் இணையில்லா வீரர்களாக வளர்த்து வந்திருக்கிறாள். உன் தந்தை நோய்ப்பட்ட பின்னர் இரவு பகல் அவர் பக்கத்திலிருந்து அவளே எல்லாப் பணிவிடைகளையும் செய்து வருகிறாள். உன் அன்னையை என் மகளாகப் பெற்றதை நினைக்கும் போதெல்லாம் என் தோள்கள் பூரிக்கின்றன!'' என்றார் மலையமான்.

''தாத்தா! என் தாயை நினைக்கும் போதெல்லாம் நான் அடையும் பெருமிதத்துக்கு அளவில்லை. ஆனால் ஒன்று கேட்கிறேன், சொல்லுங்கள்! என் தந்தையின் கொடிய பகைவன் ஒருவன் அவரைக் கொல்வதற்குக் கத்தியை ஓங்கிக் கொண்டு வருவதாக வைத்துக் கொள்ளுங்கள். என் தாயார் அப்பொழுது என்ன செய்வாள்? முன்னால் நின்று கண்ணீர் பெருக்கிக் கணவனைக் காப்பாற்றும்படி அப்பகைவனை வேண்டிக்கொள்வாளா? முக்கியமாக, அப்படி வருகிற பகைவன் என் அன்னைக்குத் தெரிந்தவனாகவும் இருந்துவிட்டால்...''

''குழந்தாய்! உன் தாயார் ஒரு நாளும் அப்படிப் பகைவனிடம் உயிர்ப்பிச்சை கேட்க மாட்டாள். மலையமான் மகள் அவ்விதம் ஒருகாலும் தான் பிறந்த குலத்தையும் புகுந்த குலத்தையும் அவமானப்படுத்த மாட்டாள். அவளுடைய புருஷனுடைய பகைவனைத் தனக்கும் கொடிய பகைவனாகவே கருதுவாள். பகைவன் முன்னால் கைகூப்ப மாட்டாள்; கண்ணீரும் விடமாட்டாள். கணவன் உயிர் துறந்தால் உடனே அவன் மீது விழுந்து தானும் உயிரை விடுவாள். அல்லது மனத்தைக் கல்லாகச் செய்து கொண்டு உயிரோடிருப்பாள்; பகைவனைப் பழிக்குப் பழி வாங்குவதற்காக மட்டுமே உயிரை வைத்துக் கொண்டிருப்பாள்!''

இதைக் கேட்ட ஆதித்த கரிகாலன் ஒரு நெடிய பெருமூச்சு விட்டு, ''தாத்தா! நான் போய் வரவா?'' என்றான்.

'' அவசியம் போகத்தான் வேண்டுமா ?''

''அதைப் பற்றி இன்னும் என்ன சந்தேகம் தாத்தா? பாதி வழிக்கு மேலே வந்தாகி விட்டதே!''

''ஆம்; பாதிவழிக்கு மேல் வந்தாகி விட்டது. நானும் முதலில் உன்னைப் போக வேண்டாம் என்றேன். அப்புறம் போகும்படி சொன்னேன். உன் தம்பி

# விளையாட்டுக்குள் ஒரு விளையாட்டு

## ஓட்டமா ? ஆட்டமா ?

விளையாட்டு மன்னர் ஸி. கே. நாயுடு இந்திய ஆட்டக்காரர்களில் விரல் விட்டு எண்ணக்கூடியவர்களில் ஒருவர். ஆட்டத் திறமையோடு அவர் பல இளைஞர்களுக்குப் பயிற்சியளித்தும் புகழ் பெற்றவர்.

ஒரு தடவை ஓர் இளைஞர் அவரிடம் கிரிக்கெட் பயிற்சி பெற வந்தார். டிப்டாப்பாக உடையணிந்திருந்த இளைஞனைப் பார்த்து, ''நீங்கள் மைதானத்தை இரண்டு முறை சுற்றி ஓடிவாருங்கள்!'' என்றார் திரு ஸி. கே. நாயுடு.

அந்த டிப்டாப் இளைஞருக்கு அத்தனை பேர்களுக்கு மத்தியில் மைதானத்தைச் சுற்றி ஓடிவருவது கௌரவக் குறைவாகப்பட்டது. '' ஸார் ! நான் கிரிக்கெட் பயிற்சி பெறத்தான் வந்திருக்கிறேன். ஓட்டப் பயிற்சிக்கு இல்லை!'' என்று கூறினார்.

''எனக்குந் தெரியும். உங்களுக்குக் கிரிக்கெட் ஆட உடலில் போதுமான சக்தி இருக்கிறதா என்று சோதித்துப் பார்க்கத்தான் உங்களை ஓடச் சொல்கிறேன்! முதலில் மைதானத்தைச் சுற்றி ஓடிவாருங்கள். அப்புறம் மட்டை பிடிக்கலாம்!'' என்று உறுதியாகக் கூறினார் திரு ஸி.கே. நாயுடு.

-- குண்டுமணி

யைப் பற்றிச் செய்தி கேட்ட பிறகு நீ போவதே நல்லது என்று தீர்மானித்தேன். அருள்மொழி வர்மன் இறந்திருப்பான் என்று நான் நம்பவில்லை...''

''நானும் அதை நம்பவில்லை...''

''உன் தந்தையின் இளம் பிராயத்தில் சில காலம் அவர் இருக்கும் இடம் தெரியாமல் இருந்தது. அது போல் அருள்மொழியும் ஏதேனும் ஒரு தீவில் ஒதுங்கியிருப்பான். சில நாளைக்கெல்லாம் வந்து சேர்வான் என்றே நம்புகிறேன்! ஆனாலும் அச்செய்தி சோழ நாடெங்கும் கொந்தளிப்பை உண்டாக்கி விட்டிருக்கிறது என்று அறிகிறேன். உன் பெற்றோர்களும் கவலையில் ஆழ்ந்திருப்

பார்கள். இச்சமயம் அவர்கள் பக்கத்தில் நீ இருந்து ஆறுதல் சொல்வது அவசியம். அப்படிப் போகும்போது பழுவேட்டரையர்களின் விரோதியாகப் போவதைக் காட்டிலும் சிநேகமாகப் போவது நல்லது. ஆகையினால்தான் நீ சம்புவரையர் அழைப்புக்கு இணங்கிப் போவதற்குச் சம்மதித்தேன். அவன் வேண்டுமென்றே என்னை அழைக்கவில்லை. அழைத்திருந்தால் நானும் வந்திருப்பேன்....''

''தாத்தா! எனக்காக அவ்வளவு தூரம் நீங்கள் பயப்படுகிறீர்களா? என்னை அவ்வளவு கையாலாகாதவன் என்று எண்ணி விட்டீர்களா?'' என்று கேட்டான் கரிகாலன்.

''இல்லை, தம்பி! இல்லை! நீ எத்தகைய வீராதி வீரன் என்பது எனக்குத் தெரியாதா? கொடிய ஆயுதங்களைத் தரித்த பதினாயிரம் பகைவர்களின் நடுவில் நான் உன்னைத் தன்னந் தனியாக நம்பி அனுப்புவேன். ஆனால் கண்ணீர் பெருக்கி உன் மனத்தைக் கலங்கச் செய்யக்கூடிய ஒரு பெண்ணின் முன்னால் உன்னைத் தனியாக அனுப்புவதற்குமட்டும் பயப்படுகிறேன்...''

''சம்புவரையர் மகள் அப்படியெல்லாம் ஜால வித்தையில் தேர்ந்தவள் என்று நான் கேள்விப்படவில்லை, தாத்தா! ஆண்மக்கள் முன்னால் வருவதற்கே அஞ்சக்கூடிய பெண்ணாம் அவள். கந்தமாறன் சொல்லியிருக்கிறான். நானும் அப்படியெல்லாம் அவசரப்பட்டுத் தாய் தந்தையர் சம்மதம் இல்லாமல் ஒரு காரியத்தைச் செய்துவிடமாட்டேன். உங்களுடைய பழங்குடியில் பிறந்த இரண்டு பெண்கள் இன்னும் மணமாகாமல் இருக்கிறார்கள் என்பதும் எனக்கு நன்றாகத் தெரியும்.''

''ஆதித்தா! அதைப் பற்றிய சிந்தனையே எனக்கு இல்லை. என் மூத்த மகனுடைய பெண்கள் இரண்டு பேர் திருமணப் பிராயம் வந்தவர்கள் இருக்கிறார்கள்தான். ஆனால் அவர்களை உன் கழுத்தில் கட்டும் எண்ணம் எனக்குச் சிறிதும் இல்லை. ஏற்கனவே சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலரும் என்மீது பொறாமையும் பகைமையும் கொண்டிருக்கிறார்கள். இதுவும் வேறு சேர்ந்துவிட்டால் கேட்க வேண்டியதில்லை. அதற்குப் பதிலாகச் சம்புவரையர் மகளையே நீ கட்டிக் கொண்டால் நான் ஒருவாறு திருப்தியடைவேன். எனக்கோ வயது அதிகமாகி விட்டது. உடல் தளர்ந்து விட்டது. சில சமயம் உள்ளமும் நெகிழ்ந்து விடுகிறது. மறுபடியும் என் அருமைப் பேரனைக் காணமாட்டேனோ. இதுதான் உன்னை நான் பார்ப்பது கடைசி முறையோ என்றெல்லாம் சில சமயம் எண்ணிக் கொள்கிறேன். இனிமேல் என்னால் உனக்கு உதவி எதுவும் இல்லை. புதிய சிநேகிதர்கள் சிலர் உனக்கு அவசியம் வேண்டும். உன் விஷயத்தில் சிரத்தை கொள்ளக் கூடியவர்கள் வேண்டும். ஆகையால் சம்புவரையர் மகளை நீ மணந்து கொண்டால் நான் உண்மையில் மகிழ்ச்சியே அடைவேன்.''

''தாத்தா! உங்கள் மகிழ்ச்சிக்காகக் கூட அதை நான் செய்ய முடியாது. சம்புவரையர் மாளிகைக்கு நான் விருந்தாளியாகப் போவது அவருடைய சிநேகத்தை விரும்பியும் அல்ல; அவர் மகளை மணம் புரியவும் அல்ல. நீங்கள் அது பற்றி நிம்மதியாயிருக்கலாம்.''

''அப்படியானால் எதற்காகப் போகிறாய், குழந்தாய்! என்னிடம் உண்மையைச் சொல்லக் கூடாதா? உன்னுடைய நண்பர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்ததில் சில வார்த்தைகள் அவ்வப்போது என் காதில் விழுந்தன. பெரிய பழுவேட்டரையன் அறுபது வயதுக்கு மேல் கலியாணம் செய்து கொண்டானே, அந்த மோகினிப் பிசாசு உனக்கு ஓலை அனுப்பியிருக்கிறாள் என்றும், அதனாலேதான் நீ கடம்பூர் வரச் சம்மதித்தாய் என்றும் அவர்கள் பேசிக் கொண்டார்கள். அது உண்மையா?''

''ஆம், தாத்தா! அது உண்மைதான்!'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''கடவுளே! இது என்ன காலம்? கரிகாலா! நான் சொல்வதைக் கேள். நீ பிறந்த சோழ குலம் இரண்டாயிரம் ஆண்டுகளாக வாழையடி வாழையாக வந்து பெருமை பெற்ற குலம். உன்னுடைய மூதாதைகள் சிலர் உலகத்தை ஒரு குடையில் ஆண்ட சக்கரவர்த்திகளாயிருந்திருக்கிறார்கள். சில சமயம் உறையூரையும் அதன் சுற்றுப்புறத்தையும் மட்டும் ஆண்ட குறுநில மன்னர்களாயிருந்திருக்கிறார்கள். சிலர் ஏகபத்தினி விரதங்கொண்டு இராம பிரானைப் போல் இருந்ததுண்டு. சிலர் பல தாரங்களையும் மணம் செய்து கொண்டு வீரப் புதல்வர்கள் பலரை ஈன்றதுண்டு. சிலர் சிவபக்தர்கள்; சிலர் திருமாலின் பக்தர்கள். சிலர் 'சாமியுமில்லை; பூதமுமில்லை' என்றும் சொல்லி வந்தவர்கள். ஆனால் அவர்களில் யாரும் தங்கள் நடத்தையில் களங்கமுண்டாக்குமாறு நடந்ததில்லை. பிறன் மனை விழைந்ததில்லை. குழந்தாய்! கன்னிப் பெண்களாயிருப்பவர்கள் எத்தனை பேரை வேண்டுமானாலும் மணந்து கொள். உன் பாட்டனின் தந்தை — புகழ்பெற்ற பராந்தக சக்கர




"அப்பா!"

"என்னடா கண்ணு?"

"அக்கா கல்யாணத்துக்குப் பத்திரிகை அச்சடிச்சிட்டீங்க. புக்போஸ்ட் கட்டணம் பத்து பதினைந்து ஆச்சு. இப்போ இருபது பைசா! மறந்துடாதீங்க!"

"கட்டணத்தை இரட்டிப்பு ஆக்கிட்டாங்களே, அநியாயமா!"

"எனக்கொரு ஐடியா தோணுது அப்பா. நீங்க கார்டு, கவர் எதுவுமே வாங்க வேண்டாம். தபால் பில்லைகூட வாங்க வேண்டாம்! முந்நூறு இன்லண்ட் லெட்டர் தபாலாபிலே வாங்கி அதிலேயே பத்திரிகை அச்சடிச்சு ஒட்டிப் போட்டுடலாம். கார்டு கவர் வாங்கற செலவும் மிச்சம்; ஒவ்வொரு பத்திரிகை அனுப்பவும் அஞ்சு பைசா மிச்சம்!"

"பலே, பலே! அருமையான யோசனை. தபால் கட்டணத்தை இப்படி ஏத்திக்கிட்டே போனா, நாம்பளும் இப்படி ஏதாச்சும் புது யோசனை கண்டுபிடிக்கத்தான் வேணும்!"

"அப்பா! இதுவரைக்கும் மணியார்டர் அனுப்பப் பத்து ரூபாய்க்கு இருபது பைசா வீதம் கமிஷன் வசூலிச்சாங்க இல்லையா? அதாவது நூறு ரூபா அனுப்ப வேணும்னா ரெண்டு ரூபா கமிஷன். ஆனால் நூற்றியொரு ரூபா அனுப்பணும்னா, இனிமே இரண்டு ரூபாய் நாற்பது பைசா அனுப்புதல் கட்டணம் செலுத்தணும்."

"அப்படியா? நூறு ரூபாய்க்கு மேலே ஒரு ரூபா கூட அனுப்பணுமானா, அந்த அதிகப்படி ஒரு ரூபாய்க்கு நாற்பது பைசா கட்டணமா? இருபது பைசா கொடுத்தாப் போறாதா?"

"போறாது அப்பா! ஆனா, இரண்டு ரூபாய் இருபது பைசா செலவிலேயே அந்தத் தொகையை அனுப்ப ஒரு வழி இருக்கு..."

"என்னது....? கொஞ்சம் விளக்கமாகத்தான் சொல்லேன்!"

"இதென்னப்பா பெரிய விஷயம்? நூறு ரூபாய்க்கு ஒரு தனி மணியார்டர் அனுப்பறது. கட்டணம் இரண்டு ரூபாய்; ஒரு ரூபாய்க்கு இன்னொரு மணியார்டர் அனுப்பிவிடறது. அதுக்குக் கட்டணம் இருபது பைசா. ஆக மொத்தம் இரண்டு ரூபாய் இருபது பைசாதான் செலவு!"

"அடேடே! ஒரு மணியார்டரா அனுப்பினா இருபது பைசா கூட ஆகும். இரண்டு மணியார்டரா பிரிச்சு அனுப்பினா நமக்கு இருபது பைசா மிச்சம்."

"ஆனா தபாலாபீசுக்கு வேலை அதிகம். இது தபால் அதிகாரிகளுக்கு ஏன் தெரியாமல் போச்சு?"

"புரியலேடா கண்ணு!" -பாணன்

---

வர்த்தி, ஏழு பெண்களை மணந்து கொண்டார். அவரைப் போல் நீயும் மணந்து கொள். ஆனால் பெரிய பழுவேட்டரையனை மணந்து கொண்ட மாய மோகினியைக் கண்ணெடுத்தும் பாராதே!"

"மன்னிக்க வேண்டும், தாத்தா! அந்த மாதிரி குற்றம் ஒன்றும் நான் செய்ய மாட்டேன். சோழ குலத்துக்கும் மலையமான் குலத்துக்கும் களங்கம் உண்டுபண்ண மாட்டேன்!"

"அப்படியானால் அவள் அழைப்புக்காக ஏன் போகிறாய், குழந்தாய்?"

"உண்மையை உங்களிடம் சொல்லி விட்டே போகிறேன். அவளுக்கு ஒரு சமயம் நான் ஒரு பெரிய தீங்கு செய்தேன். அதற்காக அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளப் போகிறேன்!" என்றான் கரிகாலன்.

"இது என்ன வார்த்தை? ஒரு பெண்ணிடம் நீ மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவாவது? என் காதினால் கேட்கச் சகிக்கவில்லையே?" என்றார் மலையமான்.

ஆதித்தகரிகாலன் சிறிதுநேரம் தலை குனிந்தவண்ணமாக இருந்தான். பிறகு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பாட்டனாரிடம் பழைய வரலாற்றை ஒருவாறு கூறினான். வீரபாண்டியனைத் தான் தேடிச் சென்று அவன் ஒளிந்திருந்த இடத்தைக் கண்டுபிடித்ததையும், நந்தினி குறுக்கிட்டு உயிர்ப்பிச்சை கேட்டதையும், தான் அதைக் கேட்காமல் ஆத்திரப்பட்டு அவனைக் கொன்றதையும், அது முதல் தன் மனம் நிம்மதியில்லாமல் அலைப்புறுவதையும் பற்றி விவரமாகக் கூறினான்.

"அந்த ஞாபகம் என்னை ஓயாமல் கஷ்டப்படுத்திக் கொண்டிருக்கிறது, தாத்தா! அவளை ஒரு தடவை பார்த்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டால்தான் என் மனம் நிம்மதி அடையும். அவளும் போனதையெல்லாம் மறந்துவிடத் தயாரா யிருப்பதாகக் காண்கிறது. இராஜ்யத்தில் குழப்பம் விளையாமல் பார்த்துக் கொள்வதிலும் சிரத்தை கொண்டிருக்கிறாள். அதற்காகவே என்னை அழைத்திருக்கிறாள். போகும் காரியத்தை முடித்துக் கொண்டு வெகு சீக்கிரமாகவே காஞ்சிக்குத் திரும்பிவிடுவேன், தாத்தா! திரும்பி வந்ததும் என் தம்பியைக் கண்டுபிடித்துக் கொண்டு வருவதற்காகக் கப்பல் ஏறிப் புறப்படுவேன்" என்றான் ஆதித்த கரிகாலன்.

கிழவர் மலையமான் ஒரு பெருமூச்சு விட்டு, "இதுவரையில் விளங்காமல் இருந்த பல விஷயங்கள் இப்போது எனக்கு விளங்குகின்றன. இன்று வரை மர்மமாக இருந்த பல காரியங்கள் அர்த்தமாகின்றன. விதியை வெல்ல யாராலும் முடியாது என்பது நிச்சயந்தான்!" என்றார். (தொடரும்)

# காற்றினிலே வரும் கீதம்!

## செளந்தரா கைலாசம்

**கா**ற்றினிலே வரும் கீதம்!... புத்தகத்தின் இந்தத் தலைப்பைப் பார்த்ததுமே எல்லோருக்கும் இசைக் குயில் எம். எஸ் அவர்களின் குரலும் அவர் ஏற்று அருமையாக நடித்த மீராவின் உருவும் நினைவுக்கு வராமல் இருக்கவே முடியாது. பக்தை மீராவைத் தமிழ் மனங்களிலே — ஏன் பாரத மனத்திலெல்லாம் பதியும்படி செய்தது. வானெழுந்த வண்டுகிலாய் வாய் திறந்து, தன்னையே தானிழந்து பாடும் தவமதனைச் செய்து நல்லிசைதனைப் பெய்யும் எம். எஸ் அவர்கள் நடித்து வெளிவந்து களிதந்த திரைப்படமேயாகும்.

கானத்தால் இழுத்து நம்மைக் குளிர்வித்த அதே மீரா திரு ரா. கணபதி அவர்களை ஆட்கொண்டு விட்டாள். ''பக்தையாக இருந்துவிட்டுப் போனால் ஆகாதோ? கண்ணனிடம் என்ன காதல் வேண்டிக் கிடக்கிறது — அதுவும் கணவனென ஒருவனைக் கைப்பிடித்த பிறகு இந்த மீராவுக்கு? தொட்டுத் தாலி கட்டிய கணவன் துடிக்கத் துடிக்க — கட்டுக் கடங்காத காதலுடன் கண்ணனையே நாடிப் பாடித் தவம் கிடந்தால் அது கடைந்தெடுத்த துரோகம் ஆகாதோ?'' இத்தகைய கேள்விகளை எழுப்பி விட்டிருந்தாள் மீரா பல இதயங்களிலே! ஆனால் கணபதி அவர்களின் பார்வையிலே மீரா அணுவளவு மாசுகலவாத அமுதமழையாக — ஆனந்த ஊற்றாக, பௌதிகமே அடிபட்டுப்போனபக்குவமாக, ஆன்மக் காதலின் அழகுச் சிகரமாக, 'தத்'ரூபமாக நின்றிருக்கிறாள். ''காட்டாதனவெல்லாம் காட்டிக் கேளாதனவெல்லாம் கேட்பித்த'' மீராவிடம் முன் ''தோஷம்'' இருப்பதாகப் பட்ட கணபதி அவர்கள் உள்ளுக்குள்ளே மீராவைப் பற்றி இருந்த உறுத்தல் மறைந்த கதையை அவரே முகவுரையில் சொல்கிறார். ஜீவாத்மாவே பரமாத்மா ஆவதை விடப் பெரிய அதிசயமாக, பக்திக்காதலில் ஈடுபட்டோரின் உடம்பே ஆத்மாவுக்குச் சின்னமாகி விருப்பதையும் அந்நிலையில் சிருங்காரமும் சந்நியாசமுமே ஒன்றுவதையும் தாம் அழுத்தமாக உணர்ந்து விட்டார்.

சரித்திர கூட்டைக்குள்ளேயேவா அவர் சஞ்சரிக்கிறார்? கற்பனையின் சத்தியத்திலே தாமும் கரைந்து, நம்மையும் அல்லவா கரைய வைக்கிறார். அவர் நூலைப் படித்த பிறகல்லவா தெரிகிறது மீராவின் வாழ்க்கை ஆடிப் பாடி அடங்கியதல்ல — ஊடிக் கூடி ஒடுங்கிய தென்பது? ஆழ்ந்த தத்துவப் பொருளை அவனிக்கெல்லாம் விளக்கும் மீராவின் அவதார ரகசியத்தை மிக அற்புதமாகத் தெரிவிக்கிறார் ஆசிரியர்.

கூடிக் கலந்து ஒன்றி விட்டாள் குழலூதும் கண்ணனின் அன்பையும் அழகையும் நெஞ்சு குளிரக் குளிரச் சுவைப்பது எப்படி என்னும் பரிதவிப்பினிலே பிரிவதனை வேண்டிக் கேட்டுப் பெற்ற அவ்வரத்தின் பயனாக — கோலோக ராதா பூலோக மீரா ஆனாள் என்று புரிய வைக்கிறார். ரகசியத்தை அம்பலத்திலே போட்டு உடைத்தும் விடாமல் ஆழக் குழி தோண்டிப் புதைத்தும் விடாமல் உள்ளதை உள்ளபடியே நாமுணரப் பெருக்கிக் காட்டிய பெருமை நிச்சயமாக ஆசிரியர் அவர்கட்கு உண்டு. கணபதி அவர்களின் எழுதுகைக்குள்ள பெருமையையும் வலிமையையும் உலகறியும். எவ்வளவு திறம்பட எழுதக் கூடியவர் — இறைவனை எண்ணி எண்ணி இதயம் கனிந்து காதல் பெருகிடத் திகழும் இந்தக் கணபதி என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக இந்நூல் அமைந்திருக்கிறது. முதலிலிருந்து முடிவு வரை முற்றிக் கனிந்த பக்திச் சுவை தேனின் ஆறாய் வருகிறது; தெளிவை உள்ளே தருகிறது; தெவிட்டாத பேரின்பத்தை நல்குகிறது. கண்ணனின் எல்லையற்ற பேரழகை எத்தனை எத்தனை கோணங்களில் எத்தனை எத்தனை ராகங்களில் எத்தனை எத்தனை நாளங்களில் மீரா ரசித்திருக்கிறாள்? மீராதான் அவ்வளவு ரசித்தாளோ அல்லது கணபதிதான் மீராவைக் கருவியாக்கி அப்படிச் சுவைத்திருக்கிறாரோ? ஒன்று நிச்சயம். இந்த நூல் ரஸனையில் கனிந்த கனி. எனவே அதன் சுவையும் பயனும் தனி. இதனைப் படித்தால் ஈடில்லாத பக்தி வெள்ளமாய்ப் பெருகும்!

கல்கியில் தொடராக வெளிவந்த கட்டுரைத் தொடரை இன்னும் மிக விரிவாக்கித் தருகிறது இந்நூல்.

ஆய்ச்சியர் குலத்துதித்த
அருங்குணன் தனையே நாடித்
தீக்கடை உருகுகின்ற
மெழுகெனத் திகழ்ந்தாள் ஊரார்
ஏச்சிலே வளர்ந்தாள் கண்ணன்
இசையெனும் மீரா நம்மின்
மூச்சிலே இழையும் கீத
முழுமையும் அவளே என்று
தீட்டிய கணபதிக் கோல்
திறமதும் பக்தி நெஞ்சில்
ஊட்டிடத் தொண்டு செய்யும்
உணர்வதும் மேலும் ஓங்க —
காட்டிடை வள்ளி சேரக்
கை கொடுத்தவனே, உள்ள
வீட்டிடைத் தொடர்ந்து இருந்து
வேண்டுவ செய்வானாக!

பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை—4; விலை: ரூ. 6.00.



# ராமாயணம்

## ராஜாஜி

ராம லக்ஷ்மணர்களும் ஹனுமானும் பரஸ்பரம் தங்கள் வரலாற்றையும் கஷ்ட சுகங்களையும் பேசிக் கொண்டார்கள். இந்தச் சம்பாஷணையின் பயனாக லக்ஷ்மணனுக்கு ஹனுமானிடம் மிகுந்த பிரியம் உண்டாயிற்று. அதை ராமனிடமும் சொன்னான்.

''மகா ஐசுவரியம் படைத்த என் தமையன், சக்கரவர்த்தியின் மூத்த மகன், ராஜ்யத்தை விட்டுவிட்டு வனவாசம் செய்கிறான். உன் அரசனை சுக்ரீவனிடம் தன் காரியம் நிறைவேறுவதற்காக உதவியை நாடி வந்திருக்கிறான். சாபத்தால் ராக்ஷச வடிவம் பெற்ற தைத்யன் ஒருவன் எமக்கு 'சுக்ரீவன் என்கிற வானர ராஜனுடைய சகாயத்தைப் பெற்றீர்களானால் அரக்கன் வஞ்சித்து எடுத்துப் போன ராஜகுமாரியை மறுபடியும் அடைவீர்கள்' என்று சொன்னான். அவன் சொற்படி இங்கே வந்திருக்கிறோம். உன்னுடைய அரசனுடைய நட்பைத் தேடி வந்திருக்கிறோம்'' என்றான் லக்ஷ்மணன்.

வாயு குமாரனை ஹனுமானும், ''சுக்ரீவன், வாலியால் பீடிக்கப்பட்டு, ராஜ்யத்தையும் மனைவியையும் இழந்தான். இரண்டையும் மறுபடியும் அடைவான் என்பது இப்போது உறுதியாயிற்று. உங்கள் நட்பை என் அரசன் அடைந்து அவனும் பயனடைவான். உங்களுடைய காரியமும் அவன் உதவியினால் நிறைவேறும்'' என்றான்.

பிறகு மிகுந்த சந்தோஷத்தோடு மூவரும் வானர ராஜனை சுக்ரீவன் இருப்பிடம் சென்றார்கள். போகும் மார்க்கம் வானரர்கள்தான் தாண்டக் கூடுமாகையால், ஹனுமான் சுயரூபமான வானர உருவமெடுத்து இரு ராஜகுமாரர்களையும் தன் தோளின்மீது ஏற்றிக் கொண்டு சென்றான்.

நல்லவர்களுடைய உள்ளங்கள் வெகு சீக்கிரமாக ஒன்றுகூடும். வெகு காலம் ஒரே இடத்தில் கூடி வாழ வேண்டியதில்லை. அநேக சந்தர்ப்பங்களில் ஒருவரோடு ஒருவர் கலந்து பழக வேண்டியதில்லை. இருவர் உள்ளங்களிலும் தானாக உதிக்கும் உணர்ச்சியே நட்பைத் திடீர் என்று உண்டாக்கும்.

**புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்**

என்பது திருக்குறள்.

தவிர இந்த நட்பு, பகவானுடைய சங்கற்பம். ஹனுமானுடைய பக்தியையும் சேவையையும் ராமச்சந்திரன் அடைய வேண்டும் என்று நிச்சயிக்கப்பட்டிருந்தபடியால் ஒருவரை ஒருவர் கண்டவுடனே பூரண நம்பிக்கை தோன்றி விட்டது. தன் தோளின் மேல் இரு ராஜகுமாரர்களையும் தூக்கிச் செல்வது உள்ளத்தில் உண்டாகிவிட்ட இணைப்பிலிருந்து தோன்றின மெய்ப்பாடு. நண்பர்களும் காதலர்களும் கட்டி அணைத்துக் கொள்வது போல் தாசனும் பக்தனுமான ஹனுமான் தன் சுவாமியைத் தோளின் மேல் மகிழ்ச்சி பரவசமாகத் தூக்கிச் சென்றான்.

ரிச்யமுகத்திலிருந்து மலையமலை ஏறிப் போய்ச் சேர்ந்ததும் ஹனுமான் சுக்ரீவனிடம் போய் ராம லக்ஷ்மணர்கள் வந்து அரசனைப் பார்க்கக் காத்திருப்பதாகத் தெரிவித்து, ''இந்த ராமன் சிறந்த அறிவும் மற்ற எல்லா நற்குணங்களும் பெற்ற ராஜகுமாரன். இக்ஷ்வாகு குலத்தைச் சேர்ந்த புகழ்பெற்ற மகாராஜா தசரதனுடைய மூத்த குமாரன். தகப்பன் சொல்லைச் சத்தியமாக்குவதற்காகத் தம்பியுடனும் மனைவியுடனும் அயோத்தியை விட்டு வனம் சென்றான். தசரத மகாராஜன் தன் இளைய மனைவியால் தூண்டப்பட்டு ராமனை ஆரண்ய வாசம் செய்யச் சொன்னான். அப்படி ராமன் தம்பி லக்ஷ்மணனுடன் காட்டிலிருந்த போது ராஜகுமாரர்கள் பக்கத்தில் இல்லாத சமயம் பார்த்து ராமன் மனைவியை ராவணன் தூக்கிக் கொண்டுபோய் விட்டான். அவளைத் தேடிக் கண்டுபிடித்துத் தர ராமன் உம் உதவியை நாடி வந்திருக்கிறான். இந்த ராஜகுமாரர்கள் உம்முடைய நட்பை அடையும் தகுதி வாய்ந்தவர்கள். இவர்கள் சிநேகிதத்தை அடைந்தால் நீரும் பெரும் பயனடைவீர்'' என்றான்.

சுக்ரீவன் அழகிய மானுட உருவம் தரித்து ராஜகுமாரர்களைக் கண்டு பேசினான். ராமனை நோக்கிக் கையை நீட்டி, ''ராஜகுமாரனே! வானரனை என் சிநேகிதத்தை நீ விரும்புவாயாகில்



இதோ என் கை, அங்கீகரிப்பாயாக! உன் குணங்களையும் மகிமையையும் வாயுபுத்திரனால் அறிந்தேன்!'' என்றான்.

ராமனும் நீட்டிய கையை அங்கீகரித்துச் சுக்ரீவனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

உடனே ஹநுமான் குச்சிகளைக் கொண்டு வந்து தீ மூட்டினான். அக்னியைப் பூஜித்துப் பிரதட்சிணம் செய்து ராமனும் சுக்ரீவனும் நட்புப் பிரதிக்ஞை செய்தார்கள். ''இருவர்களுடைய சுகத்திலும் துக்கத்திலும் இருவரும் சம பங்கு கொள்வோம். நம்முடைய நட்பு என்றும் இருப்பதாக'' என்று பிரமாணம் செய்தார்கள்.

இரண்டு பெரும் மரக் கிளைகளை ஆசனமாகக் கொண்டு ராமனும் சுக்ரீவனும் ஓர் இடத்திலும் ஹனுமானும் லக்ஷ்மணனும் மற்றோர் இடத்திலும் சந்தோஷமாய்ப் பேசிக் கொண்டு உட்கார்ந்தார்கள். சுக்ரீவன் தன் கஷ்டங்களைச் சொல்லிக் கொண்டான். ''வாலியின் பயத்தால் வனத்தில் இங்குமங்கும் திரிந்து கொண்டும் இந்த மலையில் மறைந்திருந்தும் காலம் கழித்து வருகிறேன். நீ வாலியைக் கொன்று என் துக்கத்தைத் தீர்த்து ராஜ்யமும் மனைவியும் நான் மறுபடியும் பெற்று அநுபவிக்கும்படி செய்வாயோ?'' என்றான்.

''நிச்சயமாக இதோ இந்த அம்புக்கு வாலி இரையாவான், சந்தேகமில்லை'' என்றான் ராமன்.

இப்படிச் சுக்ரீவனும் ராமனும் பேசிக் கொண்டிருந்த காலத்தில் அசோகவனத்தில் சீதையின் இடக் கண் துடித்தது. அரக்கர்களின் அரசன் ராவணனுடைய இடக் கண்ணும் துடித்தது.

## 55. ஆபரணங்களைக் கண்டான்

சீதையை இழந்ததனால் ராமன் படும் துக்கத்தைப் பார்த்துச் சுக்ரீவன் அவனுக்குப் பலவிதமாகத் தைரியம் சொன்னான்.

''லக்ஷ்மணன் சொன்னதிலிருந்து எல்லாம் அறிந்தேன். நீ சிந்திக்க வேண்டாம். எப்படியாவது சீதை இருக்குமிடத்தைக் கண்டுபிடிப்போம். அவளை எங்கே மூடி வைத்திருந்தாலும் கண்டு பிடித்துத் தருவோம். நீ சந்தேகப்பட வேண்டாம். வெகு நாள் காத்திருக்க வேண்டியதுமில்லை. சீக்கிரமே இந்தக் காரியத்தை முடித்துத் தருவோம்.

''ஆகாய மார்க்கமாய் ஒரு ஸ்திரீயை அரக்கன் தூக்கிப் போனதை நானும் என்கூட இருந்தவர்களும் பார்த்தோம். அவள் துடிதுடித்து அழுது கொண்டும், 'ராமா! லக்ஷ்மணா!' என்று கூக்குரலிட்டுக் கொண்டும் போனதைக் கண்டோம். எங்களை அவளும் கண்டாள். கண்டு தன் உத்தரீயத்தை எடுத்துத் தன் மேலிருந்த ஆபரணங்களைக் கழற்றி அதில் முடித்துக் கீழே போட்டாள். அதை எடுத்து வைத்திருக்கிறோம். நீ இது உன் மனைவி சீதையின் ஆபரணங்களா என்று பார்க்கலாம்'' என்றான்.

இதைக் கேட்டதும் ராமன் தாங்க முடியாத பரபரப்புடன், ''கொண்டு வா, கொண்டு வா'' என்றான்.

குகையில் வைத்திருந்த அந்தத் துணி மூட்டையைக் கொண்டு வந்தார்கள். வஸ்திரத்தைப் பார்த்தவுடனே ராமனுடைய துக்கம் பொங்கி, பொறுக்க முடியாமல் போய் விட்டது. சிறு முடிப்பாகக் கட்டியிருந்த சீதையின் உத்தரீயத்தைப் பார்த்ததும் அரக்கன் கையில் சிக்கித் தவித்த சீதையின் சங்கடநிலை ராமன் கண்முன் நின்றது.

''லக்ஷ்மணா! இந்த மூட்டையை அவிழ்த்துப் பார். என்னால் பார்க்க முடியவில்லை'' என்று கண்களை மூடிக் கொண்டான்.

லக்ஷ்மணன் துணி முடிப்பை அவிழ்த்து, ''இவை சீதையின் நூபுரங்களே. சந்தேகமில்லை'' என்றான்.

கால்களுக்கு இட்ட ஆபரணங்களை முதலில் எடுத்து லக்ஷ்மணன் அடையாளம் கண்டதைப் பற்றிப் பக்தர்கள் மிகவும் ரசித்து அதை எடுத்துக் கொண்டு உபந்நியாசம் செய்வது வழக்கம்.

பிறகு எல்லா ஆபரணங்களையும் எடுத்து ராமன் நன்றாக அடையாளம் கண்டு கண்ணிலே ஒற்றிக் கொண்டான். ''புல்லில் விழுந்தபடியால் அப்படியே எல்லாம் கெடாமலிருக்கின்றன பார், லக்ஷ்மணா!'' என்றான் ராமன்.

பிறகு துக்கத்துக்கு மேல் அடங்காத கோபம் மூண்டவனாக, ராமன், ''சீதையைத் தூக்கிப் போன இந்த அரக்கனுக்காக யமன் வீட்டு வாயில் திறந்து கிடக்கிறது. அவனையும் அவன் குலம் முழுவதையும் இப்போதே அழிப்பேன், நிச்சயம்'' என்றான். **(தொடரும்)**

### சுபிட்ச முட்டை!



பிரிட்டிஷ் பிரதமர் வில்ஸன் தொழிற் கட்சித் தலைவர். அவர் தேர்தல் பிரசாரத்துக்குப் போயிருந்தபோது யாரோ கூட்டத்திலிருந்து அவர் மீது முட்டையை எறிந்தார்கள்.

இதைப் பற்றி எதிர்க் கட்சித் தலைவர் ஹீத், ''தொழிற்கட்சி இதுகாறும் நடத்திய ஆட்சியில் மக்கள் எவ்வளவு அதிருப்தி அடைந்திருக்கிறார்கள் என்பது இச் சம்பவத்திலிருந்தே தெரிகிறது. இல்லையேல், மக்கள் மந்திரிகளின் மீது எறிவதற்காக என்று தங்கள் கோட்டுப் பைகளில் முட்டைகளை எடுத்துக்கொண்டு வருவார்களா?'' என்றார்.

ஆனால் பிரதமர் வில்ஸன், ''கூட்டங்களில் பேசுபவர்கள்மீது விட்டெறிவதற்கு அழுகிப்போன முட்டைகளைத்தான் உபயோகப்படுத்துவார்கள். ஆனால் என் மீது வீசி எறியப்பட்ட முட்டை நல்ல முட்டை. வீசி எறியக்கூட நல்ல முட்டைகளை மக்கள் உபயோகப்படுத்துவதிலிருந்தே தொழிற்கட்சியின் ஆட்சியில் மக்கள் சுபிட்சமாக இருக்கிறார்கள் என்று தெரியவில்லையா?'' என்றார்.

# ஆடியபாதமும் ஆட்டுவிக்கும் நாயகியும்





'வானமாய் நின்று இன்ப மழையாய் இறங்கி என்னை வாழ்விப்பது உன் பரம் காண்' என்று பாடினார் தாயுமான அடிகள். ஞானவானமாய் — சிதாகாசமாய்— சிதம்பரத்தில் ஆடும் பரமன், கருணை இன்ப மழையாய், 'செழுநீர்த் திரளாய்', அப்புலிங்கமாகத் திருவானைக்காவில் திருவருள் புரிகிறான். பஞ்சபூத க்ஷேத்திரங்களில் ஆகாசஸ்தலமான தில்லைச் சிற்றம்பலத்திலும், அப்புஸ்தலமான ஆனைக்காவிலும் இப்போது இருபெரு விழாக்கள் நடக்கவிருப்பது லோகத்துக்கே க்ஷேமமாகும்.

ஃ ஃ ஃ

சைவ சமயப்படி தில்லையைச் சிதாகாசமாகச் சொல்வது போல், சாக்தர்கள் காஞ்சிபுரத்தைப் பிலாகாசமாகக் கொள்வர். பிலாகாச ரூபிணியான ஸ்ரீ காமாட்சி மஹாத்ரிபுர ஸுந்தரிக்குச் சமீபத்தில் ஸஹஸ்ரநாம ஸ்வர்ண ஹாரம் செய்து அணிவித்த ஸ்ரீ காமகோடி ஆசாரியர்களின் பொன்னுள்ளம் சிதாகாசரூபனான ஸ்ரீமன் நடராஜ மூர்த்தியின் ஆடிய திருப்பாதத்துக்கு வைர அங்கி அணிவிக்கவும் அவாவியது. மகான்கள் எண்ணிய எண்ணியாங்கு எய்துவரல்லவா? ஆசாரியப் பெருமானின் விருப்பம் விரைவிலேயே ஈடேறியது. சித்சபேசனின் சீரார் திருவடிக்கு அற்புதமான வைர அங்கி தயாராகி விட்டது.

இந்த ஜூன் 21ந் தேதியன்று தில்லையில் குஞ்சிதபாதத்துக்கு வைர அங்கி சாத்தப்படுகிறது. ஸ்ரீ காமகோடி இளைய பீடாதிபதிகள் ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் இந்தப் புண்ணிய வைபவத்தில் கலந்து கொள்கிறார்.

ஃ ஃ ஃ

தன்னில் தானே ரமித்துக் கொண்டு அசைவற்றுக் கிடக்கும் சிவத்தை நடராஜனாக ஆட்டுவிப்பவள் பராசக்தியே. பரம்பொருளை ஆட்டுவித்து அகிலங்களைப் பெற்று ஆண்டு வரும் அகிலாண்டேசுவரியாக அநுக்கிரஹம் புரிகிறாள் ஆனைக்காவில். அவளது கருணைப் பெருக்கின் உருவமே காவிரியில் குளிரக் குளிர முங்கிக் கிடக்கும் ஜம்புநாதன்.

கருணையல்லவா அகிலாண்டேசுவரி முன்னொரு கால் பாரதத்தின் அவைதிகப் போக்கைக் கண்டு கடுமை கொண்டாள். அக்கடுமையைத் தாங்கவொண்ணாது உலகு தவித்தது. அப்போது வைதிகத்தை நிலைநாட்டவே அவதரித்த அருட்பூங் கொண்டலான ஆதிசங்கர பகவத்பாதர்கள் அகிலாண்டேசுவரியின் சந்நிதிக்கு எழுந்தருளினார். அவளது உக்ர கலையை ஸ்ரீ சக்ர வடிவான இரு தாடங்கங்களில் ஆகர்ஷித்து அவளது திருச்செவிகளிலேயே ஆபரணமாக அணிவித்து விட்டார்; அவளது பார்வையை அருள் மயமானதாக்கக் கருதி அவளது திருஷ்டிக்கு நேர் எதிரே அவளது அருமை மைந்தன் கணநாதனைப் பிரதிஷ்டை செய்தார். உடனே தேவி பரம ஸௌம்யமான, அநுக்கிரஹ மூர்த்தியானாள்.

அன்றிலிருந்து ஆதிசங்கரர் அணிவித்த ஸ்ரீ சக்ர தாடங்கம் பழுதுறும் போதெல்லாம் அதைச்செப்பம்செய்து அம்பாளுக்கு மீண்டும் அணிவிக்கும் பொறுப்பை ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடத்து ஆசாரியர்கள் பெற்றிருக்கிறார்கள்.

ஜூலை 5ந்தேதியன்று ஸ்ரீ அகிலாண்டேச்வரி ஆலயத்தில் மகாகும்பாபிஷேகம் நடைபெறுகிறது. ஸ்ரீ டி. எம். நாராயணசுவாமிப்பிள்ளை முதலிய மெய்யடியார்களின் இதயபூர்வமான நன்முயற்சியில் இந்தத் திருப்பணி நிறைவு பெற்று, குடமுழுக்குப் பெருவிழா நடைபெறவிருக்கிறது. ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் இந்த வைபவத்திலும் கலந்து கொள்கிறார்.

இவ்விழாவில் நேரிலோ, மானசிகமாகவோ கலந்து கொண்டு, உலகத் தாயைத் தாயுமானவர் திருவாக்கில் துதிப்போம் :

**....அகிலாண்ட கோடி யீன்ற**
**அன்னையே! பின்னையும் கன்னி என**
**மறை பேசும்**

**ஆனந்தரூப மயிலே...**
**வரை ராஜனுக்(கு) இருகண் மணியாய்**
**உதித்தமலை**
**வளர் காதலிப் பெண் உமையே!**

## செண்டாடும் ஐயனார்

சோழ நாட்டின்கண் தஞ்சை ஜில்லா மாயூரம் தாலுக்கா கொரங்கொண்டான் என்னும் ஊருக்கு அருகில் காவிரி தென் கரையில் உள்ள பொன்செய் என்னும் கிராமத்தில் மிகப் பழமையாக அமைந்துள்ள ''செண்டாடும் ஐயனார்'' ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்யும் பணியை அவ்வூர்வாசிகள் மிகுந்த பக்தி சிரத்தையுடன் நடத்தி வருகிறார்கள். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் அநுக்கிரகம் இத்திருப்பணிக்குக் கிட்டியுள்ளது. இந்த உத்தமமான திருப்பணிக்குப் பக்தர்கள் யாவரும் பொருளுதவி செய்து ஹரிஹரபுத்திரருடைய அருளுக்குப் பாத்திரமாகவேணும்.

பொருள் அனுப்ப வேண்டிய விலாசம்: பொருளாளர், திருப்பணிக் குழு,
பொன்செய் கொரங்கொண்டான் போஸ்ட், மாயூரம் தாலுக்கா.

# தேவை: தீவிர நடவடிக்கை

முருகேச முதலியார்

**வ**ங்காளத்தில் நக்ஸல்பாரிகளின் தீச்செயல்கள் — நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டிருப்பினும், மத்திய அரசு தாம் கைக்கொள்ளும் அடக்குமுறை நடவடிக்கைகளைப் பற்றித் தெளிவான ஓர் அறிக்கையை லோக சபையிலோ அல்லது வேறு முறையிலோ இதுவரை வெளிப்படுத்தவில்லை. உள்நாட்டுத் துறை அமைச்சரகம் இராஜ்ய சர்க்கார்களுக்கு விடுத்த ஓர் அறிக்கையில் இப்போதுள்ள சட்டங்களே நக்ஸல்பாரிகளின் வன்முறைகளைத் தடுக்கவும், தண்டிக்கவும் போதுமானவை என்று கூறியுள்ளது என வெளியாயிற்று. அது தவிர உள்நாட்டுத் துறை செயலரும், மந்திரிசபை செயலரும் மேற்கு வங்காள கவர்னரையும் அதிகாரிகளையும் சில தினங்களுக்குமுன் சந்தித்துப் பேசியதாகவும், அவர்களும் தற்போதுள்ள சட்டங்களே சாலும் என்ற கருத்தையே சொல்லிப் போனதாகவும் தகவல் வந்தது. மேலும் வங்காள இராஜ்ய மேல் அதிகாரிகள் சிலர் மாற்றப்பட்டனரென்றும் வெளியாயிற்று. மத்திய அரசு ஏதோ தனிச் சட்டம் இயற்றுவதைப் பற்றி ஆலோசித்து வந்தது. அது எந்த அளவில் உருவாகி வருகிறதென்பதைப் பற்றி ஒரு செய்தியும் இல்லை. இவற்றைப் பார்க்கும்போது மத்திய அரசு தீவிரமாக ஒரு நடவடிக்கையும் எடுக்க ஆயத்தமாக இல்லையென்பதை நம்ப வேண்டியிருக்கிறது. மேற்கு வங்காளத்தில் பிரச்னை சட்ட ஒழுங்கு மட்டுமல்ல என்று பூசி மெழுகப்படுகிறது. வேறு பொருளாதார நன்முறைகள் அமுல் செய்ய வேணுமாயின், ஜனாதிபதி ஆட்சியில் மத்திய அரசு கவர்னர் மூலம் வெகு சுலபமாகவும் துரிதமாகவும் செய்யலாமே!

வெடிகுண்டு, துப்பாக்கிப் பிரயோகம் மட்டுமின்றி, மாணவர்கள் பரீட்சைகளையும் சீர்குலைத்து ஒரு பெரிய நகரத்தையே தங்கள் பயங்கர ஆட்சியில் நக்ஸல்பாரிகள் வைத்துள்ளார்கள் என்றால், அது வெட்கக்கேடு. சட்ட ரீதியான அரசாங்கம் பலமுள்ள முறையில் ஏதாவது சில நடவடிக்கைகள் எடுத்து மக்கள் நம்பிக்கையை இழக்காமல் பாதுகாத்தல் முறையாகும்.

தற்போதுள்ள சட்டங்கள் போதுமானவை என்பது வெறும் பேச்சு. போதுமானவை என்றால் ஏன் உபயோகப்படுத்தப்படவில்லை, யார் செயல்படாமல் இருந்ததற்குக் காரணம் என்ற கேள்விகளுக் கெல்லாம் விடையளித்தாக வேண்டும். இவ்வளவு நாச வேலைகளும் கொலைகளும் நிகழ்ந்தபிறகும் இன்னும் தடுப்புக் காவல் சட்டத்தை மீண்டும் ஓர் அவசரச் சட்டமாக அமுல் செய்யவில்லை. இப்படிச் செயலாற்றலின்றி வாளா கிடப்ப



தற்கு என்ன காரணம் என்பது பொதுமக்களுக்கு விளங்கவில்லை. நக்ஸல்பாரிகளைச் சட்டத் துரோகிகளாக்குவதற்குச் சட்ட அறிக்கை செய்யவேண்டும் என்ற ஒரு கருத்துக்கு, உள்துறை அமைச்சர் திரு சவான் அது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல என்று மட்டும் கூறி, பின்னர் தாம் என்னதான் செய்யப் போகிறார் என்பதற்கு ஒரு குறிப்பும் தரவில்லை. இடையில் சுமார் இரண்டாயிரம் பேர்கள் கைது செய்யப்பட்டிருப்பதாக வும் அதில் பல பேர் ஜாமீனில் விடப்பட்டதாகவும் கூறப் பட்டுள்ளது. இம்மாதிரி குற்றச்சாட்டுகளில், குற்றவாளிகளை ஜாமீனில் விடுவது வழக்கமே இல்லை. அகப்பட்டவர்கள் மீது வழக்குத் தொடுப்பதற்கு முன்பே — அவர்களைச் சிறைப்படுத்திய போதே — வலை வீசிப் பின்னணியில் உள்ளவர்களையும் பிடிப் பது போலீஸ் செய்யவேண்டிய முக்கிய வேலையாகும். மத்திய ஆயுத போலீசை அடக்குமுறை வேலைக்கு விட்டு விட்டு, ராஜ்ய போலீஸ் புலன் விசாரிப்பதில் ஈடுபட வேண்டும். தவிர, வழக்குத் தொடுக்கப்பட்டவர்களைத் தனி நீதிபதிகளை நியமித்துத் துரிதமாக விசாரணைக்குக் கொண்டு வந்து, சட்டப்படி தண்ட னைக்கு உள்ளாக்க வேண்டும். குற்ற முறை சட்டம் (சி. ஆர். பி.) — ஐ.பி.சி. எனப்படும் சட்டம் இவை தனிப்பட்ட குற்றங்களுக் குப் போதும். ஆனால் சட்டத்தைக் குலைக்க ஏற்பட்டுள்ள சதிக்

**மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டுகள் 1500 பேர் ஓர் அகதிகள் முகாமைச் சூறையாடி 10 பேர்களைக் கொன்றதுடன் 41 பேர்களைப் படுகாயப்படுத் தினர் என்ற செய்தி ஜூன் 8உ எல்லா நாளிதழ் களிலும் வெளியாகி யிருக்கிறது. கம்யூனிஸ்டு களின் இதுபோன்ற அராஜக நடவடிக்கைகள் நாட்டில் நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே போகையில் நமது அரசும் தலைவர்களும் மேற் கொள்ள வேண்டிய துரித நடவடிக்கைகளை விவரிக்கிறது இக்கட்டுரை.**

குற்றங்களுக்குத் தனிச் சட்டம் முக்கியம் என்று அதிகாரம் செலுத்திச் செயலாற்றிய அனுபவஸ்தர்கள் தயங்காது யோசனை கூறுவார்கள்.

இந்த நடவடிக்கைகளுக்குப் பொதுஜனங்களின் ஆதரவு நிச்சயம் இருக்கும். இந்தச் சமயத்தில் குடியாட்சிக் கட்சிகளின் தலைவர்களும் நாட்டிலுள்ள அறிவாளிகளும் சேர்ந்து ஓர் அறிக் கையை விடுத்தால், சட்டத்தை மீறுபவர்களும் அவர்களின் பின்னணியில் உள்ளவர்களும், மாவோ கொள்கையில் ஈடுபட்டு வெளிநாட்டு முறைகளில் மூட மோகம் கொண்டவர்களும் தயங்குவார்கள். இல்லையேல் தாங்கள் செய்யும் வன்முறை, புரட்சிக் கோணத்திலிருந்து பார்க்குமிடத்துத் தவிர்க்க முடியாதது என்று மதிமயங்கிச் செயல்படுவார்கள்.

நமது இந்தியப் பண்பாட்டில் குடிகளின் தீங்குக்கு அரசாட்சியே பொறுப்பு என்ற ஒரு நீதி உண்டு. அரசாணை, முறை பிறழ்ந்தோ, வலு இழந்தோ குடிக ளுக்குத் தோல்வி ஏற்படாதபடி அரண் செய்து நீதியை நிலைநிறுத்த வேண்டும். அனைத்துக் கட்சித் தலைவர் களும் ஒன்றுசேர்ந்து வன்முறையை விட வேண்டுமென ஒரு பிரகடனத்தை விடுதல் சிறிது பலன் தரும். அரசும் கண் விழித்துச் செயலாற்றும்.



# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 34

உண்மையை நாடுபவனுக்கு மௌனம் அத்தியாவசியம். மௌனத்தினுடைய பிரயோஜனத்தை நான் நன்கு அறிந்தவன். சஞ்சீவியைப் போன்ற மருந்து அது.

தென் ஆப்பிரிக்காவில் ஒரு கிறிஸ்தவ மடத்துக்கு ஒரு நாள் சென்றேன். மிக அழகான ஆசிரமம். அங்கே பல ஆசிரமவாசிகள் மௌன விரதத்தில் இருந்தார்கள். ''இது ஏன்?'' என்று தலைவரைக் கேட்டேன். அவர் சொன்னதாவது: ''இது உனக்குத் தெரியாதா? நாம் அனைவரும் உள்ளத்தில் இடம் பெற்றவர்கள் அல்ல. இஷ்டப்படி பேசி விடுகிறோம். உள்ளத்தில் உண்மையைப் பேசும் அந்தராத்மா உண்டல்லவா? அதனுடைய குரல் நம்மை எட்ட வேண்டுமானால் நாம் சத்தம் போடாமல் இருக்க வேண்டும். நாம் சத்தம் போட்டுக் கொண்டே இருந்தால் அந்தராத்மாவின் குரல் காதில் படாது.''— அவர் செய்த உபதேசத்தின் பொருளை உணர்ந்தேன். பிறகு அது எனக்கு மிகவும் உதவி வந்தது. மௌனத்தின் ரகசியத்தைக் கண்ட நான் சொல்லுகிறேன், மௌனம் மிக உயர்ந்த சாதனம்.

(யங் இந்தியா 6-8-25)

உண்மையை நாடும் பக்தனுக்கு மௌனமானது மிக்க பயன் தரும் சாதனம் என்பதை அனுபவத்தில் கண்டிருக்கிறேன். மனிதனுக்கு ஒரு கெட்ட வழக்கம்; எதையும் அதிகப்படுத்திச் சொல்லுதல். தெரிந்தும் தெரியாமலும் உண்மையை மறைப்பதும் மாற்றுவதும் மனிதனுடைய வழக்கமாகி விட்டன. இந்த வழக்கத்தை விட்டுத் தப்ப வேண்டுமானால் மௌனம் அவசியமாகிறது.

கொஞ்சமாகப் பேசுகிறவன் யோசனையின்றிப் பேசமாட்டான். ஒவ்வொரு சொல்லையும் கவனித்துப் பேசுவான். சாதாரணமாக மக்கள் பேசுவதற்கு மிக விரும்புகிறார்கள். எந்தக் கூட்டத்திலும் சபாநாயகரின் மேஜையின் மேல், பேசுவதற்கு அனுமதி கேட்டுச் சீட்டுகள் குவிகின்றன. அனுமதி தந்தவுடன் கால நிர்ணயத்துக்கு மேல் பேசுகிறார்கள். கால வரம்புக்கு மேல் அனுமதியின்றிப் பேசிக்கொண்டே போகிறார்கள். ஆட்சேபணை செய்தால் இன்னும் அவகாசம் வேண்டும் என்று கேட்கிறார்கள். இந்தப் பேச்செல்லாம் உலகத்துக்குப் பயன் தராத பேச்சு. வீண் கால விரயமே தவிர வேறில்லை.

(சுய சரிதம் - 1948ம் வருஷத்திய பதிப்பு பக்கம் 84)

உலகத்திலுள்ள சங்கடங்கள் நாம் மௌனத்தின் குணத்தை அறிந்தோமானால் பாதி தீர்ந்து போகும் என்று எண்ண இடமிருக்கிறது. இந்தக் காலத்து நாகரிகம் நம்மைச் சூழ்ந்துகொண்டதற்குமுன், நாளொன்றுக்குக் குறைந்தது ஆறு அல்லது எட்டு மணி மௌனத்தில் கழித்து வந்தோம். புது நாகரிகம் வந்த பிறகு இரவைப் பகலாக்கினோம். தங்க மயமான மௌனத்தை அழித்து அதற்குப் பதில் சத்தடியும் பேரிரைச்சலும் உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம். தினமும் இரண்டு மணி நேரமாவது நம்முடைய அலுவல்களை விட்டு மௌனமாகக் கழித்தோமானால் எவ்வளவு நன்றாக இருக்கும்! பகவானுடைய ரேடியோ எப்போதும் பாடிக்கொண்டிருக்கிறது. ஆனால் காது கொடுத்தால்தானே அது கேட்கும்? நம்முடைய இரைச்சலை நிறுத்தி மௌனமாக இருந்தால் ஆகாச வெளியிலிருந்து அந்த இசை நம்முடைய காதுக்கு எட்டும். ஒரு கிறிஸ்தவ முனிவர் வெகு அழகாகச் சொல்லியிருக்கிறார்:

''மௌனம் பூண்டால் கூண்டுக்குத் திரும்பி வரும் தேனீக்களைப் போல் நம்முடைய புலன்கள் உள்ளத்தில் அடங்கும். ஒரு கஷ்டமுமின்றி உள்ளத்தில் ஒடுங்கும். ஆத்மாவை ஆட்டிக் கொண்டிருந்த அலைச்சல்கள் அடங்கும். பயந்த அடிமைகள் போல் புலன்கள் ஒடுங்கும். சொன்னபடி கேட்கும். மனமும் புலன்களும் வர வரப் பயிற்சி பெற்று, பண்பட்டுச் சாந்த நிலை எளிதில் அடையும். தியானத்துக்கு வேண்டிய பலத்தைப் பெறுவோம்.''

(ஹரிஜன் 24-9-38)

தற்போது எனக்கு மௌன வழக்கம் இன்றியமையாத வழக்கமாகி விட்டது. முதலில் ஓய்வு பெறுவதற்காக ஆரம்பித்தேன். எழுதுவதற்கு நேரம் செய்து கொள்வதற்காகவும் பயன்படுத்திக் கொண்டேன். கொஞ்ச காலம் வழக்கப்பட்டதும் அதனுடைய ஆன்மீகப் பயனை அறிந்தேன். ஆண்டவனைத் தியானிப்பதற்கு மிக நல்ல சாதனம் என்பதைக் கண்டேன். இப்போது அது என் இயற்கை ஆகிவிட்டது. அவ்வப்போது மௌனம் இன்றி என்னால் காலம் கடத்தவே முடியாது.

உண்மையை நாடும் என்னைப் போன்றவர்களுக்கு மௌனம் மிகவும் பயன்படும். இருளை விலக்கி ஒளி தருகிறது. காட்சியானது தெளிவு அடைகிறது. வாழ்க்கை முழுதும் உண்மையைத் தேடுவதே நம்முடைய வேலை அல்லவா? ஆத்மா தன் பூரண சக்தி அடைய வேண்டுமானால் உள்ளத்தில் மௌனம் இருக்க வேண்டும்.

(ஹரிஜன் 10-12-38)

# உங்கள் நெற்றிக்கு அழகு மெருகேற்றுங்கள்




அணியும் உடைக்கேற்ப சிறிய அல்லது பெரிய பொட்டிட்டு உங்கள் நெற்றியை அலங்கரியுங்கள். கண்கவர் வண்ணங்களில் சிங்கார் குங்குமம் கிடைக்கிறது. **சிங்கார்** குங்குமம் உபயோகித்து அதிசோபையுடன் விளங்குங்கள். வசதியான டப்பிகளில் கிடைக்கிறது. உங்கள் பையில் அவசியம் ஒன்று வைத்திருங்கள்.

பாரமௌண்ட் தயாரிப்பு, பம்பாய்-31.

**சிங்கார்** குங்குமம் பிந்தி, காஜல்

# ஜனநாயகத்தைக் காப்போம்

## மொரார்ஜி தேசாய்



சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்த திரு மொரார்ஜி தேசாய் ராஜாஜியுடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார். இதைப் பற்றிக் குறிப்பிடுகையில், ''என் அவநம்பிக்கையைத் துடைத்து நம்பிக்கையூட்டி, என் உள்ளத் திரியைத் தூண்டிப் பிரகாசிக்கச் செய்தார்'' என்று ராஜாஜி கூறியது நினைவிருக்கும். சென்னையில் பல இடங்களில் மொரார்ஜி தேசாய் வெளியிட்ட கருத்துக்களில் சிலவற்றைத் திரட்டி நேயர்களுக்கு மகிழ்வுடன் வழங்குகிறோம்.

— ஆசிரியர்

நாட்டின் நிலைமை இப்போதுள்ள மோசமான நிலைமையைப் போல் சுதந்திரத்துக்கு முன்பும் இருந்ததில்லை; பின்பும் இருந்ததில்லை. ஒழுங்கீனமும், சுயநலமும், நம்பிக்கைத் துரோகமும் ஆட்சி செலுத்தும் மேலிடங்களில் இப்போது காணப்படுவது போல் என்றுமே இருந்ததில்லை. எந்த ஜனநாயக நாட்டிலும் இம்மாதிரி நிலைமையைக் காண முடியாது. நமது மக்கள் பல துறைகளில் திறமைசாலிகள். ஜனநாயகத்தை உருக் குலைப்பதில்கூட அவர்களது திறமை பிரகாசிக்கிறது எனலாம்.

ஜனநாயக முறையில் ஒருவரைத் தலைவராக ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். அவருடைய தலைமையில் செயல்பட வேண்டியது தான். ஆனால் அத்தலைவர் தமது சகாக்களுடன் கலந்து ஆலோசனைகள் நடத்தி, நாட்டுக்கு நன்மையைத் தீர யோசித்து நடத்தும் வரையில்தான் அவருடைய தலைமைக்குக் கீழ்ப்படிய வேண்டும். இந்த நிலை மாறி, தலைவரின் சுயேச்சையான கருத்துக்கள் சரியாக இருந்தாலும் தவறாக இருந்தாலும், மறு பேச்சின்றி அவற்றை மற்றவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நிலை ஏற்படும்போது நமது ஜனநாயகத் தலைமை யதேச்சாதிகாரத் தலைமையாக மாறுகிறது. அந்த நிலை முதன் முதலாக ரூபாயின் நாணய மதிப்பை மாற்றியபோது பிரதமரிடம் தோன்றத் தொடங்கியது. நாணய மதிப்புக் குறைப்பினால் மக்கள் அவதிப்படுவதை எடுத்துச் சொன்னது பிரதமருக்குப் பிடிக்கவில்லை. அன்றிலிருந்து எல்லா அதிகாரத்தையும் தம்மிடமே நிலைக்கச் செய்து கொண்டு, அவருடைய விருப்பத்துக்கு எதிராக இருந்த மற்றவர்களைப் பழித்தும் அவமானப்படுத்தியும் தம்மைச் சர்வாதிகாரியாகவே ஆக்கிக் கொண்டு விட்டார் பிரதமர். இதிலிருந்து ஏற்பட்டதுதான் ஒழுங்கீனம், அவநம்பிக்கை, துரோகம் முதலியவை.

இந்த நிலையை நாம் மாற்றியாக வேண்டும்; ஆனால் பிரதமர் மேற்கொண்டது போன்ற சர்வாதிகார முறைகளால் அல்ல. சட்டபூர்வமான, ஜனநாயக முறைகளாலேயே நிலைமையைச் சீர் செய்ய வேண்டும். சத்தியாக்கிரஹம், நேர்மையான கண்டனம், சேவா உணர்ச்சியுடன் கடமையாற்றல் — இவை போன்ற முறைகளால் நிலைமையை மாற்ற வேண்டும். ஏனெனில், நாம் எந்தத் தனி மனிதரையும் எதிர்க்கவில்லை. தீய வழிகளையும், தீய முறைகளையுமே எதிர்க்கிறோம்.

நாட்டுக்குத் தவறு இழைத்தவர்கள் தங்கள் தவறுகளை ஒப்புக் கொள்ளாததுடன், எதிராளிகள் செய்யும் நல்லதைக் கூடத் தவறுகள் என்றும், தம்மவரது தவறுகளையும் நல்லவை என்றும் திரித்துக் கூறி மக்களை மயங்க வைக்கும் நிலைமையை மாற்றித்தான் ஆகவேண்டும். இந்த நிலைமையை மாற்றும் போராட்டத்தில் நாம் எல்லோருமே நம்



முன் பக்கம்: [illegible] வர்த்தக சங்கக் கூட்டத்தில் திரு கே. ஈசுவரன் தலைமையில், திரு மொரார்ஜி தேசாய் பேசுகிறார்.

லக்ஷ்மிபுரம் இளைஞர் சங்கத்தில் திரு காமராஜரின் உருவப்படத்தைத் திறந்து வைத்து, திரு மொரார்ஜி தேசாய் உரையாற்றுகிறார். ★

முடைய பங்குக்குக் கடமையைச் செய்ய வேண்டும்.

காமராஜரின் கடமை உணர்ச்சியும், அவர் செய்து வரும் நாட்டு சேவையும், ஜனநாயகத்தைக் காக்க அவர் புரியும் சேவையும் அவரை நாட்டின் பெருமகனாக உணர்த்தியுள்ளன. அவரைப்போல் மற்றவர்களும் அவரவர் பங்குக் கடமையைச் செய்தல் வேண்டும்.

ஜனநாயகத்துக்கு நான்கு தூண்கள் ஆதாரமாக இருக்கின்றன — பார்லிமெண்ட், நிர்வாகத் துறை, நீதித் துறை, பத்திரிகைகள் ஆகியவை. இவை ஒவ்வொன்றும் சுதந்திரமாகச் செயல்படுவதுடன், மற்றவை சுதந்திரமாகச் செயல்படும்படியும் பார்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், இந்த நான்கு தூண்களில் எந்த ஒரு தூண் இடிந்தாலும், மற்ற மூன்று தூண்களும் கூடவே இடிந்துபோகும்.

சிலர் எதேச்சாதிகாரத்தை நிலைநாட்டினால் என்ன என்பது போல் பேசுகிறார்கள். அவர்களால்தான் நீதித் துறையின் சுதந்திரம் குலைக்கப்படுகிறது. நீதித் துறையைப் பலவீனப்படுத்தி விட்டால், மற்றத் துறைகளைக் காலப் போக்கில் பலவீனப்படுத்தி விடலாம் என்பது அவர்கள் எண்ணம். பத்திரிகைகளை ஓரளவு பலவீனப்படுத்தியாகி விட்டது. இதைப் பத்திரிகைகள் உணரத் தொடங்கி விட்டன. இது நல்லதற்கே. ஏனெனில், பலவீன நிலையிலிருந்து விடுவித்துக் கொள்ள இந்த உணர்வுதான் முக்கியம். பத்திரிகைகளை மட்டும் குறை கூறி என்ன பயன்? சமூகமே பலவீனமாக இருக்கும்போது பத்திரிகைகள் மட்டும் எப்படி பலமுள்ளதாக இருக்கும்? ஆகவே, ஜனநாயகத்தைப் பலப்படுத்துவது நம் எல்லாருடைய கடமையுமாகும்.

மக்களைச் சிறிது காலம் ஏமாற்றி ஒரு குறிப்பிட்ட கோஷ்டியினரை மதிக்கும்படி செய்ய முடியும். ஆனால் இது நீண்ட காலம் நடக்காது. இப்போதுள்ள அரசியல் நிலைமை நாட்டுக்கும் மக்களுக்கும் ஒரு சவாலாகும். இந்தச் சோதனையை நாம் இதுகாறும் பேணிக் காத்து வந்த ஜனநாயகம் வெற்றியுடன் எற்குமா என்று பலர் சந்தேகம் கொள்ளக் கூடும். ஆனால் நிலைமையைக் கண்டு மக்கள் அஞ்சக் கூடாது. தாங்களாகவே சிந்தித்து நிலைமையைச் சமாளிக்க வேண்டும். தங்களுடைய சொந்தப் பாதுகாப்பு, பந்தோபஸ்து, நலன் ஆகியவற்றைப் பற்றிச் சிந்திக்காமல், சமுதாயத்தின் நலனைக் கருத்தில் கொண்டு சிந்திக்க வேண்டும். இவ்விதம் சிந்தித்துச் செயலாற்றினால் நிலைமை சீக்கிரத்திலேயே சீரடையும். இதில் சந்தேகம் வேண்டாம்.

பிரதமமந்திரி கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து ஒத்துழைத்தால்கூட கம்யூனிஸம் இந்த நாட்டில் நிலைபெறுவதற்கு வாய்ப்பு இருப்பதாக நான் நினைக்கவில்லை. நம்முடைய உறுதிதான் இவ்விஷயத்தில் முக்கியம். கம்யூனிஸம் வளரவொட்டாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு நமது இளந்தலைமுறையினரைச் சாரும். இது அவர்களுடைய முக்கியமான கடமையாகும்.

வியாபாரிகளும், தொழில் வர்க்கத்தினரும் நேரடி வரிகளை ஏய்க்காமல் செலுத்த முன்வரவேண்டும். வரி விதிப்பு வர்த்தகச் சமூகத்தினருக்குப் பிடிக்காமல் இருக்கலாம். இருந்தாலும் சட்டப்படி விதிக்கப்பட்ட வரிகளைச் செலுத்துவதில் கவனம் செலுத்தத்தான் வேண்டும். சொல்லப்போனால், வரி ஏய்ப்புக்கு எதிராக ஓர் இயக்கம்கூட நடத்தலாம்.

அரசியல் சட்டத்தைக் குலைக்க வேண்டும் என்றும், தங்களுடைய லட்சியங்களை அடைவதற்காக வன்முறைகளைக் கையாளலாம் என்றும் பகிரங்கமாகப் பிரசாரம் செய்யும் கட்சிகளையும் ஸ்தாபனங்களையும் தடை செய்ய வேண்டும். நக்ஸல்பாரிகள் இதைக் கட்டுப்பாடான முறையில் கொள்கை ரீதியில் செய்கின்றனர். இதையே தன்னிச்சையாகச் செய்து வருபவர்களும் நாட்டில் இருக்கிறார்கள்.

நாட்டில் தற்போது மிகவும் அபாயகரமான அறிகுறிகள் காணப்படுகின்றன. ஆனால் இந்தச் சவால்களைத் தன்னம்பிக்கையுடனும், துணிவுடனும் சமாளித்தாக வேண்டும். நாட்டுக்கு நல்ல எதிர்காலம் காத்திருக்கிறது என்றே நினைக்கிறேன்.

தற்போதுள்ள நிலைமையைக் கண்டு மக்கள் நம்பிக்கை இழந்துவிடக் கூடாது. நாம் அநுபவித்து வரும் கஷ்டங்களே நமக்குக் கடமையை உணர்த்தி, மனத் தெளிவையும் உறுதியையும் அளிக்கும் என்று நான் நம்புகிறேன்.

# காணக் கிடைக்காத தங்கம்



## அத்தியாயம் பதினொன்று

ஜெகசிற்பியன்

கவலையும் கடுப்பும் கலந்த குரலில் சொன்னாள் முத்தம்மா: ''நீங்க என்ன சொன்னாலும் சரி, இன்னைக்கு இந்த வீட்டைக் காலி பண்ணிடத்தான் போறேன். நேத்திக்கே வீட்டுக்காரன்கிட்டச் சொல்லியும் விட்டேன். உங்களுக்கென்ன, சம்பாதிக்கிறதையெல்லாம் சாராயக் கடையிலே கொட்டிக் கொடுத்துட்டு எண்ணமத்த ராஜாவா இருப்பீங்க; மாசம் பொறந்தால் இருபது ரூபா குடிக்கூலி கொடுக்கிறதுக்குப் படற கஷ்டம் எனக்குத்தானே தெரியும்? சாமியா பார்த்து நமக்கு அந்த உதவி பண்ணி யிருக்கிறார். அதை வேண்டாம்னு சொல்ல மாட்டேன்.''

சிறிது நேர மௌனத்துக்குப் பின், ''நீ வேலை செய்யற அந்த வீட்டுக்காரர் எங்கே போறாராம்? எப்ப திரும்பி வந்து சேருவாராம்?'' என்று கேட்டார் ரத்தினவேலு.

''என்னமோ ஷராவதி அணைக்கட்டாமே, அங்கே அவருக்கு வேலை மாற்றலாகி யிருக்குதாம். அந்த இடத்திலே குடும்பத்தோடு போய் இருக்கிறது கஷ்டமாம். அதுவுமில்லாம அங்கே ஆறு மாசம்தான் வேலையாம். அப்புறம் பழையபடி இந்த ஊருக்கே அவரை மாற்றிப்பிடுவாங்களாம். இதுவும் தவிர அவர் பிள்ளைகள் எல்லாம் இங்கே படிக்குதுகள். நடுவாந்தரத்திலே அதுகளை இழுத்துப் பறிச்சுக்கிட்டுப்போய் எந்தப் பள்ளிக்கூடத்திலே சேர்க்க முடியும்? அதனால் அவர் மட்டுமே போகிறார். இங்கே இருக்கிறவங்க, அவரோட சம்சாரம், மூணு பிள்ளைகள், வயசான மாமியார் — அவ்வளவுதான். ஆண்பிள்ளைத் துணை இல்லை. அதுக்குத்தான் என்னை வந்து கூட இருக்கச் சொல்றாங்க. என் மேலே அந்த அம்மாளுக்கு ஏதோ ஒரு நம்பிக்கை, நல்ல அபிமானம். இல்லேன்னா இவ்வளவு நாள் அங்கே நான் குப்பை கொட்ட முடியாது. அந்தப் பங்களாவுக்குப் பக்கத்திலே அவுட்—அவுஸ் ஒண்ணு இருக்குது. சும்மாதான் பூட்டிக் கிடக்குது. அதிலே வந்து என்னைக் குடும்பத்தோடு தங்கிக் கொள்ளச் சொல்றாங்க. அதுக்குன்னு சம்பளத்திலே எதுவும் பிடிக்க மாட்டாங்களாம்.. பத்து ரூபா மேலே போட்டுத் தரேன்னும் சொல்றாங்க. ஆறு மாசத்துக்கு அப்புறம் எசமானர் திரும்பி வந்துட்டாரு, நாம் வேறே எங்கேயாச்சும் வீடு பார்த்துக்கலாம். அதுக்குள்ளாற நம்ப கஷ்ட நிலையும் சரிப்பட்டுப் போயிடும்...''

இதற்கு மேல் கேட்டுக் கொண்டிருக்கப் பிடிக்காமல் எரிச்சலுடன் எழுந்த ரத்தினவேலு, ''சரி சரி; என்னமாச்சும் பண்ணு! இன்னைக்கு நான் கொஞ்சம்

சீக்கிரமா ரெட்டிக்குப் போகணும்'' என்றவாறு சுருட்டுப் பற்ற வைத்துக் கொண்டு வெளியே சென்றார்.

முத்தம்மா நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள்.

வீட்டைக் காலி செய்வது பற்றிய விஷயமாய் நேற்றிரவு தன் கணவரிடம் அவள் பேசியிருந்தாளானால் ஒரு பெரிய ரகளையே நடந்திருக்கும்; தலைகீழாக நின்றாலும் ரத்தினவேலு அதற்குச் சம்மதித்து இருக்க மாட்டார். இதைத் தெரிந்து கொண்டுதான் கணவரின் மேல் ஏறியிருந்த 'பிசாசு' இறங்கிப் போகும் நேரமான இவ்விடியற்காலையில் அவரை எழுப்பி உட்கார வைத்துக் கொண்டு வெகு நைசாக விஷயத்தை வெளியிட்டாள் போலும்! வேலங்காட்டுப் பேயின் குணம் நீலிக்குத்தானே தெரியும்?

முத்தம்மா அவசர அவசரமாகச் சமையல் வேலைகளைக் கவனித்தாள்.

அருணகிரிக்கு ஏதோ ஒருவிதக் குழப்பம் ஏற்பட்டது. தன் அக்கா இந்த மோசமான வீட்டைக் காலி செய்து விட்டுத் தான் வேலை பார்க்கும் பங்களாவுக்கே குடி போவதை அவன் மனமார வரவேற்றான்; மகிழ்ச்சியும் அடைந்தான். இனி இந்தக் குடும்பத்தில் நிச்சயமாக ஏதேனும் நல்ல மாறுதல் உண்டாகும் என்றும் அவனுக்குத் தோன்றியது. காரணம், ரத்தினவேலு தினமும் குடித்து விட்டு வந்து வீட்டில் கலாட்டா பண்ண மாட்டார்; பண்ணவும் முடியாது. இது ஒன்றே போதாதா? ஆனால் அந்த வீடு மாற்றத்தையொட்டித் தன்னுடைய நிலைமை என்ன ஆகும் என்பதை நினைத்தபோதுதான் அவன் ஏதோ இனம் புரியாததொரு குழப்பத்துக்கு உள்ளானான்.

காலை மணி ஆறாகியது. முத்தம்மா வேலைக்குப் புறப்பட ஆயத்தமானாள். படியளக்கும் வீட்டாரின் வேலைகளைச் சீக்கிரமாக முடித்துக் கொண்டு திரும்பி வந்து இங்குள்ள தட்டு மூட்டுச் சாமான்களை வாரிக் கொண்டு போய்ப் புது வீட்டில் போட்டுப் புதுக் குடித்தனம் ஆரம்பித்து விடுவது என்பது அவளுடைய திட்டம். இவ்வளவு காரியங்களையும் அவள் ஒருத்தியே செய்து விடுவாளா?

இன்று தன்னை வேலைக்குப் போக வேண்டாம் என்றும், அவளுக்கு உதவியாக இருக்கும்படியும் சொல்வாள் என்று எதிர்பார்த்தான் அருணகிரி.

ஆனால் முத்தம்மாவோ, ''தம்பி! உன்கிட்ட ஒரு சமாசாரம் சொல்லி விட்டுப் போகணும். இன்னைக்கு இந்த வீட்





டைக் காலி பண்ணிட்டு நான் வேலை செய்யற வீட்டுக்கே குடி போயிட றேன். அது அவுட் —ஃஅவுக. ரொம்ப நல்ல வசதி. அத்தானும் சம்மதிச்கட்டாரு!'' என்று உற்சாகமாகச் சொன்னவள் சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டு ஏதோ யோசித்தாள்.

''நல்ல காரியம் பண்ணினேக்கா! ரொம்ப சந்தோஷம்!... அப்ப, சாயந்திரம் நான் எங்கே வர்றது?... அந்த வீட்டு விலாசத்தைச் சொல்லு, வந்துடறேன்!'' என்றான் அருணகிரி.

ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள் போல் தலையாட்டிக் கொண்டே முத்தம்மா, ''விலாசமா? எனக்கு அதைக் குறிப்பாச் சொல்லத் தெரியலே! நீயா அந்த இடத்தைத் தேடி அலைஞ்சு வர்றதும் கஷ்டம். சாயரட்சை ஆறு மணி வாக்கிலே கறிகாய் வாங்க நான் ரசல் மார்க்கெட்டுக்கு வருவேன். அப்ப உன்னையும் பார்த்து அழைச்சுக்கிட்டு வந்துடறேன்'' என்றாள்.

''அதுவும் சரிதான். அப்படியே செய்யக்கா!'' என்றான் அருணகிரி.

''உன் கடை முதலாளி ஒண்ணும் சொல்ல மாட்டாரே?''

''சொல்றதுக்கு என்ன இருக்குது?''

''ஆறு மணிக்கெல்லாம் வேலையை விட்டுட்டு வர்றதுக்காக...''

''ரெண்டு மூணு நாளா நான் ஆறு மணிக்கே கிளம்பிடறேன். முன்னே

மாதிரி எட்டு மணி வரையில் இருக்கிற தில்லே.''

''ஏன்டா தம்பி?''

''நான்தான் அன்னைக்கே உன்கிட்ட சொன்னேனே, இந்த வருஷம் எஸ்.எஸ் எல்.சி.க்கு மறுபடியும் பரிட்சை எழுதப் போறேன்னு!'' என்று மகிழ்ச்சியுடன் கூறினன் அருணகிரி. ''அது சரிக்கா! அந்த வீட்டிலே நான் ராத்திரி வேளை யில் படிக்கிறதுக்கு வசதி இருக்கு மில்லேயா?... விளக்கு எரிஞ்சா யாரா வது ஏதாச்சும் சொல்லுவாங்களா?'' என்று உள்ளார்ந்த கவலையுடன் வினவினான்.

'நல்லாக் கேட்டே போ! அந்த வீட்டுப் பிள்ளைகள் மூணும் விடிய விடியப் படிக்குதுகள்'' என்று பெருமை கலந்த புன்னகையுடன் சொன்னுள் முத்தம்மா. பிறகு,''அப்ப நான் வரேன் தம்பி!'' என்றவாறு வேலைக்குப் புறப் பட்டுச் சென்றுள்.

அருணகிரியும் சுறுசுறுப்புடன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு கிளம்பினுன்.

நேற்றுப் போலவே இன்று மதியமும் ஏழுமலை தனது 'முதலாளித்துவக் கெடுபிடி' நடவடிக்கைகளை மேற்கொண் டான். அதாவது, தனக்கு வந்த உண வில் அருணகிரிக்கு எதையும் மீதப் படுத்தி வைக்கவில்லே. ஹோட்டலில் 'நாஷ்தா' பண்ணக் காசும் கொடுக்க வில்லே. அருணகிரிக்குப் பசி வயிற்றைக் கிள்ளியது. ஆனாலும் தன் 'பிகு'வை விட்டுக் கொடுக்காமல் 'மங்கி—டாப்' நிழலில் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந் தான். பிறகு ஏதோ நினைவு வந்தவன் போல் எழுந்து அந்தப் பள்ளிக்கூடத்தை நோக்கி நடையைக் கட்டினான்.

இவ்வளவு நேரம் அவனையே ஓரக் கண்ணுல் கவனித்தபடி கடையில் சாய்ந்து உட்கார்ந்து வெற்றிலே போட் டுக்கொண்டிருந்த ஏழுமலை, ''ஓகோ!... பையனுக்கு இன்னும் கொழுப்பு அடங் கலே! இமிராத்தான் போறான்! இருக் கட்டும், இருக்கட்டும்; எத்தினி நாளுக்கு இந்தச் சவடால்னு பார்த் துப்பிடறேன்!'' என்று தனக்குள் கறு விக்கொண்டான்.

பள்ளிக்கூட மதில் சுவர் மேல் இரு கைகளையும் ஊன்றி ஓர் எம்பு எம்பி ஏறி அமர்ந்த அருணகிரியின் பார்வை முத லில் அந்த மரத்தடியை நோக்கித்தான் சென்றது. அவன் எதிர்பார்த்ததுபோல் அங்கு அந்தச் சோற்றுக் கூடைக்காரப் பெண் கனகா உட்கார்ந்திருந்தாள்.

அவளுடைய கூடையில் தூக்குப் பாத் திரங்களெல்லாம் கழுவி அடுக்கப்பட்டு விட்டிருந்தன. 'மீதச் சோறு வியா பாரம்' முடிந்துவிட்டது போலும். அப் படியானுல் அவள் ஏன் இன்னமும் எழுந்து போகாமல் அங்கேயே உட் கார்ந்திருக்கிறாள்? கூடைக்குப் பக்கத் தில் ஓர் எவர்சில்வர் டிபன் கேரியர் மட்டும் தனியாக வைக்கப்பட்டிருந்தது.

மதில் சுவர் மேலிருந்து உள்ளே குதித்த அருணகிரி, ''என்ன, சோற் றுக் கடையை ஏறக்கட்டறுப்பலே

---

## ஜூன் ஜுரம்-1

''பையன் எவ்வளவு மார்க் வாங்கிருன்?''

''இந்திரா காந்தி வந்து பேசிலே சென்றெ அளவுக்கு வாங்கி இருக்கிறான்!''



## ஜூன் ஜுரம்-2



''பையனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தாகப்போலிருக்கு. கத்தை கத்தையா நோட்டும் புத்தகங்கள் வாங்கிண்டு போறேன்.''

''இல்லே சுவாமி இல்லே. பள்ளிக்கூடத்தில் சேர்க்க இவையெல்லாம் பேரிக்கப்படுதுங்கள்!''

## ஜூன் ஜுரம்-3

''கவலைப்பட வேண்டாம்! நீ சேரப் போகிற காலேஜூம் நாளடைவும் எல்லாவிதத்திலும் முதல் தரமானது. உனக்கு எந்தவித மான குறையும் இருக்காது.''

''அப்படியானு அந்தக் காலேஜ் வேண்டாமப்பா! ஸ்டிரைக்பண்ண ஒரு அல்ப காரணம்கூட அகப் படாத கல்லூரியில் சேர்ந்து என்ன பிரயோஜனம்?''



இருக்கு?'' என்று கலகலப்பான குரலில் கேட்டான்.

அவள் அவனை மகிழ்ச்சியும் நாணமும் கலந்த புன்முறுவலுடன் ஓரக் கண்ணுல் பார்த்தாள். பிறகு தன் கூடையில் இருந்த பாத்திரங்களைச் சரியாக அடுக்கி வைப்பது போல் பாவனை செய்யலானுள்.

அருணகிரி அவளருகில் செல்லவில்லை. வலது கையை மதில் சுவர் மீதும், இடது கையைத் தன் இடுப்பிலுமாக ஊன்றி ஒருக்களித்து நின்று கொண்டு அவளையே குறு குறுவெனப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''எனக்கு நேரமாச்சு, போகணும். உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டு இருக்கிறேன். கையைக் கழுவிக்கிட்டு வாங்க'' என்று அவனைப் பார்க்காமலே ஒருவித உரிமையுடன் கூடிய செல்லச் சிணுங்கலான குரலில் சொன்னுள் கனகா.

''கையைக் கழுவிக்கிட்டு வரணுமா? எதற்கு?''

''சாப்பிடறதுக்குத்தான்'' என்றவாறு பக்கத்திலிருந்த எவர்சில்வர் கேரியரை எடுத்து அதன் மூடியைக் கழற்றினுள் அந்தப் பெண்.

'' நான் சாப்பிட்டு விட்டேனே !'' என்று மெல்லச் சிரித்துச் சொன்னுன் அருணகிரி.

சட்டென்று திரும்பிய கனகா அவனுடைய முகத்தை ஒரு விநாடி கூர்ந்து நோக்கினுள். பசிக் களைப்பால் அவன் வாடி வதங்கி யிருப்பதை உடனே புரிந்து கொண்ட அவள், ''இல்லே, நீங்க இன்னும் சாப்பிடலே!'' என்று தணிந்த குரலில் இழுத்தாள்.

''நிஜமாத்தான் சொல்றேன். இப்பத்தான் சாப்பிட்டு விட்டு வந்தேன்'' என்று கூறி மீண்டும் நகைத்தான் அருணகிரி. அவன் இங்கு வரும்போதே இன்றைக்கும் அவள் சாப்பிடும்படி சொன்னுல் வேண்டாமென மறுத்துவிட வேண்டும் என்று உறுதியாகத் தீர்மானித்துக் கொண்டுதான் வந்திருந்தான்.

''சும்மா சொல்றீங்க! உங்க முகத்தைப் பார்த்தாலே தெரியலையா?'' என்று தலை குனிந்தபடி முணுமுணுத்த அவள் அவனைக் கடைக் கண்ணுல் நோக்கி ஒரு கந்தர்வ ரசமயமான சிரிப்பைச் சிந்தினுள்.

அவன் பதிலேதும் கூருமல் மௌனமாய் நின்ருன்.

''உங்களுக்கும் நேரமாகுதில்லே? வாங்க, சாப்பிட!''

''ஐயோ! சொன்னுல் கேட்க மாட்டேங்கிறியே, நான் சாப்பிட்டாச்சு.''

''அப்ப, சாப்பிட மாட்டீங்க?''

''அட, சாப்பிட்டாச்சுங்கறேன்!''

வெடுக்கென்று நிமிர்ந்து அவனை வெறித்துப் பார்த்தாள் அந்தப் பெண். கோபத்தால் அவள் மூக்கு நுனி சிவந்தது. ''சரி! சரி! நீங்க ஏன் சாப்பிட மாட்டேங்கிறீங்கன்னு எனக்குத் தெரியும். பரவாயில்லே. தப்பு என் மேலேதான். இப்ப புத்தி வந்துடுச்சு'' என்று ஆத்திரமும் அழுகையும் அடைக்

## ஜூன் ஜுரம்-4



மூஷிகர்: இந்தப் பயல் தேங்காய் விலை அதிகமானதிலிருந்து உங்களுக்கு வேண்டிக் கொள்ளாமல் தானே நன்றாகப் படித்துப் பாஸ் பண்ணிவிட்டான்!

## ஜூன் ஜுரம்-5

"பலே என் பையனுக்குக் காலேஜ் அட்மிஷன் கிடைக்கலே! பணம்கட்டணுமென்னு கவலே கிடையாது! அவன் ஒழுங்கா படிச்சு பாஸ் பண்ணணுமென்கிற கவலேயும் இல்லே!"



## ஜூன் ஜுரம்-6




உத்சாகம்.... விழுந்தது!

## ஜூன் ஜுரம்-7

"ஏண்டி! கமலா பரீட்சையில் பெயில்: அப்படியும் ஒரே குதூகலத்திலே மூழ்கி யிருக்கிறாளே?"

"அவள் காதலில் பாஸ்! அடுத்த வாரம் கல்யாணம்!"

கப் படபடப்பான குரலில் பொரிந்து கொண்டே, அந்த எவர்சில்வர் கேரியரைத் தூக்கிக் கூடையில் தடாலெனப் போட்டு விட்டு விருட்டென்று எழுந்தாள் அவள். தன் முன்றானையால் கம்மாடு கூடக் கோலிக்கொள்ளாமல் வெறுந் தலையிலே 'நங்'கென்று வைத்துக்கொண்டு அங்கிருந்து விர்ரெனக் கிளம்பி விட்டாள்.

என்ன சொல்வதென்றே தெரியாமல் விக்கித்து நின்ற அருணகிரி சில விநாடிகளுக்குப் பின் சடாலென இரண்டடி முன்னால் சென்றான். ''கனகா!...கனகா! கொஞ்சம் நில்லேன்!... ஒரே ஒரு நிமிஷம், நான் சொல்றதைக் கேட்டுவிட்டுப் போ!'' என்று குழறினான்.

ஆனால் அந்தப் பெண்ணோ அவனைத் திரும்பியும் பார்க்காமல் விரைந்து போயேவிட்டாள்.

சிலையாகச் சமைந்து நின்ற அருணகிரி, 'அடேயப்பா! இந்தப் பெண்ணுக்குத்தான் என்ன கோபம் வருகிறது!' என்று தனக்குள் மெல்ல முனகிச் சிரித்துக் கொண்டே போய் மதில் சுவர் மேல் ஏறி உட்கார்ந்தான். அந்தப் பெண் தன்னைச் சாப்பிட அழைத்ததையும், தான் வேண்டாம் என்று பிடிவாதமாக மறுத்து விட்டதையும் சிறு பொழுது எண்ணிப் பார்த்தான்.

'நேற்று ஏதோ அவள் பாவம் பரிதாபம் பார்த்து எனக்குச் சோறு போட்டாள்; இன்றைக்கும் அதே மாதிரி அவளிடம் ஓசியில் சோறு வாங்கிச் சாப்பிடுவது அசிங்கம் இல்லையா? அவள் கொடுப்பது, நான் வாங்கிக்கொள்வது என்று வழக்கப்படுத்திக் கொண்டால் அப்புறம் என்னை மதிப்பாளா? வயிற்றுப் பாட்டுக்கே லாட்டரி அடிப்பவன் என்று இளக்காரமாக எண்ணி விடுவாளே! நல்ல வேளை, கொஞ்சத்தில் என் மானத்தைக் காப்பாற்றிக் கொண்டு விட்டேன்!'

தன்னைத் தானே பாராட்டிக் கொள்கிறவன் போல் தன் தொடைமீது ஒரு தட்டுத் தட்டிக் கொண்டான் அருணகிரி. ஆனால் அவ்வளவு நேரம் அடங்கிக் கிடந்த பசி இப்போது குபீரென்று கிளர்ந்தெழுந்து அவனுடைய குடற்கொடிகளை முறுக்கிப் பிழிய ஆரம்பித்தது. களைப்பும் சோர்வும் கண்களைக் கிறக்கின. மதில் சுவர் மேல் அப்படியே படுத்து விட்டான். அவனையறியாமலே ஒரு கால் மணி நேரம் தூங்கியும் போனான். பள்ளிக்கூட மணி ஓசை கேட்டுத் திடுக்கிட்டு எழுந்து அவசரம் அவசரமாகக் குழாயடிக்குப் போய், முகத்தைக் கழுவி, வயிறு நிறையப் பச்சைத் தண்ணீரையும் குடித்துவிட்டுச் சைக்கிள் கடைக்கு வந்து தன் வேலைகளைத் தொடங்கினான்.

பட்டினியால் பையனின் முகம் 'மூணாம் பேஸ்து' அடித்து விட்டிருப்பதை ஜாடையாகக் கவனித்த ஏழுமலை, உள்ளூறச் சந்தோஷப்பட்டுக் கொண்டான். 'காய்றயா பயலே, காய்! வவுறு காஞ்சாத்தான் குரிப்படுவே!'—

சைக்கிளுக்குக் காற்று அடிக்கும் 'கிராக்கி' வரும்போதெல்லாம் அருணகிரி வதங்கிய முருங்கைக்காய் போல் தொய்ந்து துவண்டு 'பம்ப்'போடு சாய்ந்தான். பல்லைக் கடித்துக் கொண்டு அவன் காற்று அடிப்பதைக் காண ரொம்பப் பரிதாபமாக இருந்தது. அப்போதும் ஏழுமலை, 'ஆங், பட்டா! உனக்கு அப்படித்தான் வேணும்! அலகிரித்தனமா பண்றே? அண்டி கருங்கிறு எல்லாம் அடங்கிப் பிடும்!'' என்று கறுவிக் கொண்டான்.

மாலை மணி ஆறு ஆகியது. அருணகிரி அதோடு வேலைகளை ஏறக்கட்டிவிட்டுச் சட்டையைப் போட்டுக் கொண்டு கிளம்பி விட்டான்.

''போயிட்டு வரேம்ப்பா!''

''ஊம், ஊம்!'' என்று தலையாட்டினான் ஏழுமலை.

அருணகிரி நேரே 'காக்கா' கடைக்குப் போனான். அங்கு முத்தம்மா அவனுக்காக வந்து காத்து நின்றாள். இருவரும் அங்கிருந்து புறப்பட்டனர்.

முத்தம்மா இன்று சுத்தமாகத் துவைத்த புடவையும் ரவிக்கையும் அணிந்திருந்தாள். தலை வாரிக் கொண்டை போட்டு அரை முழம் பூவும் வைத்திருந்தாள். இந்த ஊருக்கு அருணகிரி வந்த நாள் முதல் இம்மாதிரிக் கோலத்திலே அவளைப் பார்த்ததேயில்லை. அவன் மனம் குளிர்ந்தது. களைப்பும் சோர்வும் நீங்கிச் சற்றுத் தெம்பும் ஏற்பட்டது.

''ஏங்க்கா! நம்ம வீட்டுச் சாமான்களையெல்லாம் அந்தப் புது வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்துட்டயா?''

''என்ன பிரமாதமான சாமானுங்க! ரெண்டு தகரப் பெட்டிகள், ஓர் ஓட்டை பீரோ, ஐதர் காலத்து இரும்புக் கட்டில் ஒண்ணு, சட்டி பானை, லொட்டு லொசுக்கு — இவ்வளவுதானே? கட்டிலையும் பீரோவையும் ஒரு கட்டை வண்டியிலே ஏத்திக் கொண்டு போனேன். மத்த சாமான்களை நானே நாலு நடையிலே தூக்கிக்கிட்டுப் போயிட்டேன். அதெல்லாம் மத்தியானமே முடிஞ்சு போச்சு.''

மேற்கொண்டு எதுவும் கேட்கத் தோன்றாமல் மௌனமாக நடந்தான் அருணகிரி. முத்தம்மாவும் சுறுசுறுப்

பாக நடந்து கொண்டிருந்தாள். சாலை விளக்குகள் எரியத் தொடங்கின. ஆனால் பொழுது இன்னும் முழுதுமாகச் சாயவில்லை.

ஏதோ சிந்தனையில் நடந்துகொண்டிருந்த அருணகிரி எவ்வளவு தூரம் வந்திருக்கிறோம் என்பதை அறியச் சுற்று முற்றும் பார்த்தான். கேவலம் சாலையில் நடந்து கொண்டிருப்பது இப்போது தான் அவனுக்குப் புலனாகியது. முன்னால் சென்று கொண்டிருந்த முத்தம்மா அவனைத் திரும்பிப் பார்த்து விட்டு இடதுபுறமிருந்த ஒரு பங்களா காம்பவுண்டினுள் நுழைந்தாள்.

அந்தப் பங்களாவைப் பார்த்ததுமே அருணகிரிக்குத் தூக்கி வாரிப் போட்டாற்போல் ஆயிற்று. காரணம், அது அந்த இரட்டைப் பின்னல்காரியின் வீடு! அதாவது இன்ஜினீயர் ராமச்சந்திரனின் பங்களா.

திக்பிரமை பிடித்தவனாய்ச் சாலையோரம் நின்றுவிட்ட அருணகிரி என்ன செய்வதென்றே தெரியாமல் தவித்தான்.

'இந்த வீட்டிலா என் அக்கா வேலை செய்கிறாள்?'

சட்டைப் பித்தானைத் திருகியபடி பேந்தப் பேந்த விழித்துக்கொண்டு நின்ற அவனால் மேலே காலெடுத்து வைக்கவே முடியவில்லை. சற்றைக்குப் பின் ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு தயங்கித் தயங்கி உள்ளே சென்றான்.

காம்பவுண்ட் கேட்டிலிருந்து பங்களாவுக்குச் செல்லும் பிரதான பாதையைத் தவிர மதிள் சுவரை யொட்டி ஒரு சிறிய பாதையும் சென்றது. பங்களாவின் பின்பக்கவாட்டிலிருந்த அவுட்—ஹவுசுக்கென்று அமைந்த பாதை அது. முத்தம்மா அந்தப் பாதையில்தான் போய்க் கொண்டிருந்தாள்.

அருணகிரியும் அதே பாதையில் இறங்கி நடந்தான். அவனுடைய பார்வை பங்களாவை நோக்கிச் சென்றது. அங்கே, போர்ட்டிகோவில் கார் நின்று கொண்டிருந்தது. வராந்தாவில் இன்ஜினீயரின் மனைவி மெல்ல உலாவிக் கொண்டிருந்தாள். சிறுவன் ஒருவன் ஓர் அழகிய நாய்க்குட்டியிடம் விளையாடிக் கொண்டிருந்தான். வேறு யாரும் தென்படவில்லை.

வேர்க்க விறுவிறுக்க நிலையில் அந்தச் சிறிய 'வெளி — வீட்டின்' எதிரே வந்து நின்றான் அருணகிரி.

"வாடா தம்பி, உள்ளே வா!" என்று முகமெல்லாம் மலரச் சொன்னாள் முத்தம்மா. "பார்த்தியா வீடு? எப்படி இருக்குது?" என்றாள் பெருமை வழிந்த குரலில்.

அது சின்ன வீடுதான். எதிரே குறுகலான நீண்ட வராந்தா. அதையடுத்து உள்ளே இரண்டு அறைகள். பின்னால் சமையல்கட்டு. அதையொட்டிக் குளியலறை. இவ்வளவே! எனினும் இதற்கு முன் வசந்த நகரில் குடியிருந்த வீட்டுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது — அடேயப்பா, இதைப் பங்களா என்று தான் சொல்ல வேண்டும்!

பதிலேதும் சொல்லத் தோன்றாதவனாய், தன் அக்காவையும் அந்த வீட்டையும் ஆச்சரியத்துடன் பார்த்தவாறு உள்ளே போய் ஒரு சன்னல் கட்டைச் சுவர் மீது உட்கார்ந்தான் அருணகிரி. முத்தம்மாவின் பிள்ளைகளும் அவனைப் போலவே அந்தப் புதிய வீட்டையும், அதன் 'புதுமை'யான சூழ்நிலைகளையும் கண்டு மிரண்டவர்களாய்க் கூடத்து அறையின் ஒரு மூலையில் கும்பலாக உட்கார்ந்து ஏதோ இரகசியம் பேசிக் கொண்டிருந்தனர். அந்த மிரட்சி நிலையிலும் அவர்கள் முகங்களில் மகிழ்ச்சிக் களை நிலவியிருந்தது.

"இருடா தம்பி! மார்க்கெட்டிலேயிருந்து வாங்கி வந்த சாமான்களை எசமானியம்மா கிட்டக் கொடுத்துட்டு வந்துடறேன்" என்று சொன்ன முத்தம்மா தூக்குக் கூடையை எடுத்துக் கொண்டு பங்களாவின் பின்புற வாயிலை நோக்கிச் சென்றாள்.

சன்னல் கட்டைச் சுவர்மேல் உட்கார்ந்தவாறே அந்தப் பங்களாவையும் அதன் சுற்றுப்புறச் சூழலையும் திருதிருவெனப் பார்த்துக் கொண்டிருந்தான் அருணகிரி . பூஞ்சை இருள் விரிந்து எல்லாம் மங்கலாகவே தெரிந்தன. எங்கும் அமைதி இறுகிப் போய் இருந்தது. இத்தகைய அமைதியான சூழ்நிலையில் அவன் இதுகாறும் எங்குமே இருந்ததில்லை யாதலால் அதுவே அவனுள் ஒருவித பீதியைக் கிளறிவிட்டது.

"முத்தம்மா! முத்தம்மா!"

சன்னல் கம்பிகளைப் பிடித்தபடி உட்கார்ந்து வெளியே பார்த்துக் கொண்டிருந்த அருணகிரி இந்தக் குரல் கேட்டு அதிர்ச்சியுற்றவனாய்க் கட்டைச் சுவரை விட்டுத் திடுமென இறங்கிச் சுற்று முற்றும் பரபரப்புடன் பார்த்தான்.

முத்தம்மாவைக் கூப்பிட்டுக் கொண்டே பங்களாவின் பக்கவாட்டுப் பாதை வழியாக அவுட் — ஹவுசை நோக்கி ஒயில் நடை போட்டு வந்த ஓர் அழகிய இளம் பெண்ணும் அவனைப் பார்த்துவிட்டு அப்படியே திகைத்துத் தடுமாறி நின்றாள். அவள் வேறு யாருமல்ல; அந்த இரட்டைப் பின்னல்காரியேதான்! (தொடரும்)

---

அவுட்ஹவுஸ் வாசலில் நின்ற அருணகிரி, பங்களாவிலிருந்து வந்த இரட்டைப் பின்னல்காரியைச் சந்திக்கும் கட்டத்தை இவ்விதழ் வண்ண அட்டைச் சித்திரமாகத் தருகிறார் ஓவியர் பாலு.

**நிறைய பாலும் ஊட்ட சத்தியும் உள்ளது**

# பிரிட்டானியா

# க்ளாக்ஸோ

## பிஸ்கட்டுகள்

குழந்தைகளுக்கு ஏற்ற திட உணவு. பாலின் போஷாக்குச் சத்து அடங்கியுள்ள இவை கவனமான மேற்பார்வையுடன் தயாரிக்கப்படுகின்றன. உங்கள் குழந்தைகளுக்கும் குடும்பம் முழுவதிற்கும், தினமும், பிரிட்டானியா கிளாக்ஸோ பிஸ்கட் கொடுங்கள்.




பிரிட்டானியா பிஸ்கட் கம்பெனி லிமிடெட், டிரேட்மார்க் பதிவுபெற்று உபயோகிப்போர்

**பிரிட்டானியா** என்றாலே உயர்தரம்

BBC-1001

# குடை ராட்டினம்

எஸ். ரங்கநாயகி

## அத்தியாயம் 23

"என்னப்பா வாசு, சொல்லாமல் கொள்ளாமல் வந்துவிட்டாயே! உள்ளே வந்து சொல்லியிருந்தால் நாங்களும் உன்னுடனேயே வந்திருப்போமே!" தேவகி கோபிக்காமல் நல்லதனமாக ஆரம்பித்தாள்.

வாசு இருவரையும் மாறி மாறிப் பார்த்தான். காந்தியின் பொலிவைப் பார்க்கும் போது அவளிடம் ரமாவின் சாயலைக் கண்டான். அவன் மனம் ஒரு கணம் தளர்ந்தது... 'ரமா, இவள்... ரமாவா...' உடலையே ஒருமுறை குலுக்கிக் கொண்டு சட்டென்று வாசு தன் அறைக்குள் நுழைந்து விட்டான்.

தேவகி மீண்டும் 'வாசு' எனக் கூறுவதற்குள் அவன் கதவை மூடித் தாளிட்டுக் கொண்டு விட்டான்.

தேவகியின் அருகிலேயேதான் காந்தி நின்று கொண்டிருந்தாள். தேவகி அவளைத் திரும்பிப் பார்க்கவும் கூசினாள். இந்தப் பெண் எப்படி யெப்படியெல்லாம் மனத்துள் துடித்துக் கொண்டிருக்கிறாளோ, இவளுக்கு எப்படிச் சமாதானம் செய்வது? இவளை எப்படித் தேற்றுவது?

காந்தியோ பெண் பாம்பாகச் சீறிப் பெருமூச்சு விட்டுக் கொண் டிருந்தாள். வேண்டுமென்றே வாசுவும் ரமாவும் அவள் வாழ்வைப் பாழடிக்கத் திட்டமிட்டுக் குலைப்பதாகத் தோன்றியது. அப்படிக்கு அவள் என்ன தவறு செய்துவிட்டாள்?

"காந்தி! உன்னிடம் என்ன சொல்வதென்றே புரியவில்லை. எல்லாம் நல்லபடியாக முடியும் என்றுதான் நம்புகிறேன். பொறுத்துப் பார்ப்போம்!" என்று கூறித் தேவகி அவளுக்கு ஒருபடுக்கையைக்கொடுத்தாள்.

**வி**டியும் முன்பே வாசு எழுந்து வெளியே சென்று விட்டான். காந்தியை அங்கேயே தங்கியிருக்கும்படி தேவகி எவ்வளவோ மன்றாடியும் அவள் ஒரே பிடிவாதமாகத் தன் வீட்டுக்குத் திரும்பிவிட்டாள்.

"என்னம்மா காந்தி, வாசு எதற்காக அப்படி ஓடி விட்டானும்?" அவளைப் பார்த்ததும் முதல் கேள்வியாகக் கோசல்ராம் கேட்டார்.

"வஞ்சகம் அப்பா, வஞ்சகம்! ரமாவும் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறாள்" என்றாள்.

"ரமாவை எதற்கு இழுக்கிறாய், காந்தி?" ரமாவின் மீது கோசல்ராமுக்குத் தம்மையறியாது ஒருபச்சாத்தாபம்.

"அப்பா! உங்களுக்கு ஒன்றுமே தெரியாது. புரியவும் புரியாது. ரூபகுமாரின் கட்டாயத்தின் பேரில் விவாகம் செய்து கொண்டவள் ரமா."

"என்ன சொல்கிறாய், காந்தி? தன் விருப்பத்தின் பேரில் தானே விவாகம் செய்து கொண்டதாக அவள் கூறினாள்?"

"அதெல்லாம் நடிப்பு. அவளால் வாசுவை மறக்க முடியவில்லை. வாசு என்னை மணந்தால் வாசுவை அடிக்கடி பார்க்க முடியும், உணர்ச்சிகளைக் கொட்ட முடியும் என்று திட்டமிட்டு அவள் வாசுவுக்கு என்னை மணம் முடித்து வைத்திருக்கிறாள். சொல்லப் போனால் மறைமுகமாக இத்திருமணத்துக்கு வாசுவைக் கட்டாயப்படுத்தி யிருக்கிறாள். ரமாவின் வீட்டில் நேற்று வாசுவும் ரமாவும் உணர்ச்சி மேலிட்டுக் கூவிக் கொண்டதை நீங்கள் கேட்கவில்லையா? நான் வாசுவை மணந்து சுகமாக



இருக்க வேண்டுமென்ற நல்லெண்ணம் ரமாவுக்கு இருந்திருந்தால் அவள் ஏன் அப்படி மறுகி யிருக்க வேண்டும்? வாசுவோ....? ரமாவின் தூண்டுதலால் என்னை மணந்துவிட்டு இப்போது என் அருகில் நெருங்கக் கூடத் துணிவில்லாதவராக இருக்கிறார். ரமா ரூபகுமாருடனும் வாசுவுடனும் பழக விரும்புவது போல், வாசு ரமாவுடனும் என்னுடன் பழகத் துணியவில்லை.''

முழு நினைவோடுதான் பேசுகிறோமா என்பதுகூடக் காந்திக்குப் புரியவில்லை.

கோசல்ராம் ஒன்றுமே பதில் கூறவில்லை. பிரமித்துப் போனார்.



ஆனால் அவள் பேச்சைக் கேட்டுக் கொண்டே வந்த ஆனந்த் கொதித் தெழுந்தான். ''சட், வாயை அடக்கு. ரமாவைப் பற்றி உனக்குத் தெரியாது. அவளைப் பற்றிப் புரியவும் புரியாது. வாசுவைச் சந்திக்க இடையே நீ ஒருத்தி வேண்டும் என்ற அவசியமே அவளுக்கு இல்லை. ரமாவின் குடும்ப வாழ்வைப் பற்றி நான் நன்றாக அறிவேன். தன் செய்கைக்காக வருந்திப் பச்சாத்தாபத் தீயில் வேகும் ரூபகுமார் அவளுக்குப் பூரண சுதந்திரம் அளித்திருக்கிறான். அவள் விரும்பினால் ரூபகுமாரை உதறிவிட்டு வாசுவிடம் வந்து விட்டிருக்கலாம். கணவன் மனைவி என்றான பிறகு அவள் அதுபோல் செய்யும் கீழ்க் குணம் கொண்டவள் அல்ல. எத்தனையோ கஷ்டங்கள் இருந்தும் ரூபகுமாருக்கே தன்னை அர்ப்பணிக்கும் மேம்பட்ட குணம் கொண்டவள்.''

''அதனால்தான் அவள் விவாக தினத்தன்று மாலை வாசுவைச் சந்தித்துத் தன் உணர்ச்சிகளைக் கொட்டி விட்டாளாக்கும்!''

''ஒட்டிக் கொண்டிருந்த அந்த உணர்ச்சியைக் கிளப்பி விட்டவன் வாசுதான். ரமாவை மறந்து உன்னை விவாகம் செய்துகொள்ள முன் வந்த அந்த ஆண் மகனே ஒரு நிமிடம் அவளைப் பார்த்துத் தத்தளித்து விட்டான் என்றால், பல துன்பங்களுக்கு மத்தியில் சிக்கிக் கொண்டிருந்த ரமாவின் நிலை எப்படியிருக்கும்? சிந்தித்துப் பார்!''

காந்தி பல்லைக் கடித்துக் கொண்டாள். அவள் கண்களில் நீர் மல்கியது.

ஆனந்த் நெஞ்சோடு தவித்தான். ''காந்தி, உன் சங்கடமும் வருத்தமும் எனக்கு நன்றாகப் புரிகிறது. வாசுவின் செய்கையை நான் கண்டிக்கிறேன். ஆனால் ஒன்று மட்டும் உனக்கு உணர்த்த விரும்புகிறேன். இனி உன் விவாகம் வேறு முகத்தைக் காண முடியாது. அது தீர்ந்து போன விஷயம். நீ இந்த வீட்டோடு அமர்ந்து இடப்பதால் வாசுவிடம் நீ ஒரு மாற்றத்தையும் காண முடியாது. நீ இப்போதே உன் வீட்டுக்குச் செல். அந்த வீடு உன்னுடையது. வாசு உன்னுடையவன். இதை நிலைநாட்டு. அவன் கண்ணெதிரில் உரிமையோடு நீ பழக வேண்டும். அப்போதுதான் ஓரளவு மாற்றம் காண வாய்ப்பு உண்டு.''

''தங்கையைப் பார்க்க வரும் சாக்கில் ரமா அடிக்கடி வந்தால் அது நிலைக்குத்தான்



Who cares if your hair is different?

# Sunsilk cares –
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease... gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair... revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** – more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*　　LINTAS-SS. 11-140

வழிகோலும்." மீண்டும் எரிச்சல் தலை தூக்கியது.

"காந்தி, ரமாவைப் பற்றி நீ முழுவதும் அறியாதவரை நீ அவளைப் பற்றிப் பேசாமலிருப்பதே நலம். வாசுவிடம் தான் நான் முழுத் தவறும் காண்கிறேன். மனம் முழுவதும் பண்படாத நிலையில் அவன் உன்னை மணக்கச் சம்மதம் தந்திருக்கக் கூடாது.... நான் மீண்டும் ஒரு முறை கூறுகிறேன். ரமா, தான் விரும்பினால் இப்போதும் வாசுவைச் சந்திக்க முடியும். இடையே நீ ஒருத்தி வேண்டுமென்ற அவசியமே இல்லை. ரூபகுமார் அவளுக்கு முழுச் சுதந்திரமும் அளித்திருக்கிறான். எனக்கு அவன் குடும்பத்தைப் பற்றிய முழு விவரமும் தெரியும்."

காந்தி பதில் கூறவில்லை. அவள் முகம் மட்டும் கோபக் கனலை வீசிக் கொண்டிருந்தது.

"காந்தி, நீ ரமாவின் மீது சந்தேகப்படுவதாகவே இருக்கட்டும். நீ இங்கிருக்கும் வேளையில் அவள் உன் வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்தால் என்ன செய்வாயாம்? வாசுவின் நிலை இது நாள்வரை வேறு, இப்போது வேறு. இனி அவன் உனக்குச் சொந்தம். அவனை விட்டுவிட நீ சம்மதிப்பாயா?"

காந்தி துணுக்குற்று நிமிர்ந்தாள். பந்து வீச்சைக் குறி பார்த்து அடிப்பது போல் எறிந்துவிட்டான் ஆனந்த். உண்மையில் அந்த எண்ணக் கோவையைச் சொற்களில் வெளியிட அவன் விரும்பவேயில்லை. ஆனால் காந்தி வாசுவின் வீட்டில் இருக்க வேண்டும் என்பதற்காகவே இந்தச் சொற்களை உபயோகித்தான்.

காந்தி தவித்துப் போய்விட்டாள். ஆனந்த் அவளையே கவனித்துக் கொண்டிருந்தான். அவள் முகத்தில் ஏற்பட்ட சலனங்களையும் நெற்றிச் சுருக்கங்களையும் படித்தவனுக்கு, இனி நிச்சயமாகக் காந்தி வாசுவின் வீட்டுக்குச் சென்று விடுவாள் என்ற உறுதி ஏற்பட்டது. ஆயினும் அவன் மனம் தவித்தபடியே தான் வீடு திரும்பினான். சகோதரிகள் இருவரும் எவ்வளவு ஒற்றுமையாக இருந்தனர்? ரமாவிடம் இன்னும் அந்த மாற்றுக் குறையவில்லை. ஆனால் காந்தி? இவள் மனத்தில் மட்டும் ஏன் இப்படிச் சகோதரியைப் பற்றின விஷ வித்து முளைக்க வேண்டும்? சகோதரிக்காகத் தன் காதலையே தியாகம் செய்ய முற்பட்டவள் என்று இவளை இப்போது கூறமுடியுமா? எல்லாவற்றுக்கும் முடிவாக அவனுக்கு ஒன்றுதான் புரிந்தது. 'கணவன் என்று ஒருவன் கைத்தலம் பற்றும்போது அவனைத்தான் இப் பெண்கள் வாழ்வின் முக்கிய அம்சமாகக் கருதுகிறார்கள். அவன் எத்தகையவனாக இருந்தாலும் அவன்மீது குற்றம் சுமத்த விரும்பாமல் மற்றவர் மீதுதான் தள்ளப் பார்க்கிறார்கள்.'

அன்று மாலை காந்தி வாசுவின் வீட்டுக்குப் போவதாகக் கூறியதும் கோசல்ராம் திடுக்கிட்டார்.

"என்னம்மா இது, அன்று அவ்வளவு முரட்டுத்தனமாக ஓடினான். வந்திருந்த உறவினர்களுக்கு ஒரு போக்குக் காட்ட உன்னையும் அனுப்பினோம். மறுநாளே நீ திரும்பி விட்டாய். உன்னை அவன் ஏறெடுத்தும் பார்க்கவில்லை. இப்போது திடீரென்று ஏன் அங்கு போகிறேன் என்கிறாய்! எப்போதும் போல் நீ இங்கேயே இருந்துவிடு. அவன் என்ன செய்துவிடுவான்? அவனைப் போய் நீயும் ரமாவும் காதலிக்க வேறு செய்தீர்களே? அதை நினைத்தால்தான்...."

தமக்குக் கீழ்ப்பட்ட நிலையில் இருக்கும் வாசு தம்மை எப்படியெல்லாம் துன்புறுத்தி விட்டான் என்று கோசல்ராமுக்கு அவன்மீது ஒரே கோபம்!

"அப்பா, வாசுவின் வீடு என்று எப்படி அப்பா இனி தனியாய்ப் பிரிக்க முடியும்? இனி அது என் வீடுதானே?"

காந்தியின் பேச்சைக் கேட்டதும் கோசல்ராம் அதிர்ந்து போய்விட்டார்.

"அவர் என்னை எத்தனைதான் அலட்சியம் செய்தாலும் விவாகம் என்று முடிந்துவிட்ட பிறகு அவர் வீட்டிலிருக்கும் என் உரிமையை அவர் பறிக்கவே முடியாது, அப்பா. அவர் வீட்டுக்குள் எனக்குப் பிடிக்காதவர்கள் வந்தால் 'உள்ளே வராதே' என்று தடுக்கும் அளவுக்கு எனக்கு உரிமை உண்டாகி விட்டது" என்று காந்தி அழுத்தமாகக் கூறினாள். ஆனந்த் காட்டிவிட்ட பாதை இது.

தந்தை எவ்வளவு கூறியும் கேளாமல் காந்தி உடனே புறப்பட்டு விட்டாள்.

பெட்டியும் படுக்கையுமாகக் காந்தி வந்ததும் தேவகிகூட ஒரு நிமிடத்துக்கு அசந்துபோய்விட்டாள். பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு, "வாம்மா, காந்தி! இனிமேல் இந்த வீட்டுப் பொறுப்பு முழுவதும் உன்னுடையது தான்" என்றாள்.

காந்தி ஒன்றும் பதில் கூறவில்லை.

வாசு இரவு வீடு திரும்பியபோது காந்தி அங்கு பெட்டி படுக்கையோடு குடியேறிவிட்டதை அறிந்து திடுக்கிட்டான்.

மறுநாள் முதல் தேவகி இரு துருவங்களையும் இணைக்க என்ன என்னவோ முயற்சி எடுத்தாள். அவளது எந்த

முயற்சியும் பலிக்காது போயிற்று. வாசுவும் காந்தியும் இரு துருவங்களாகவே நின்றனர்.

நாட்கள் மேலேறி மாதந்தைக் கணக்கிட்டன. தேவகி வகையறியாது தவித்துப் போனாள்.

ரமா கோடைக்கானலிலிருந்து திரும்பி விட்டாள். ரூபகுமார் முன் போல் ஆபீசுக்குச் செல்ல ஆரம்பித்தான். ஆபீஸிலிருந்து நேராக வீடு திரும்பினான். ரமாவிடம் கலகலப்பாகப் பழகினான்.

ரமாவுக்குப் பிரசவ காலம் நெருங்கியது. உடலில் அசதியும் தளர்ச்சியுமாக வாட்டி எடுத்தன. அதனால் அவள் வீட்டோடு இருந்தாள். காந்தியின் வாழ்க்கை எந்த நிலையில் இருக்கிறதோ என்ற சஞ்சலம் மட்டும் அவளை வாட்டி வந்தது.

ஒரு நாள் கோசல்ராமுக்கு ஜுரமென போனில் செய்தி வரவே அவரைப் பார்க்க அவள் சென்றாள். அப்பொழுது காந்தியும் அங்கிருந்தாள்.

ரமாவைக் கண்டதும் காந்தி முகத்தைக் கடுகடுவென்று வைத்துக்கொண்டாள்.

கோடைக்கானலுக்குப் போய்த் திரும்புவதற்குள் காந்தியின் கோபம் தணிந்துவிடும் என்று அவள் நினைத்திருந்தாள். ஆனால் நிலைமை இன்னும் மோசமாக இருந்தது. இருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல், "காந்தி! பேறுகாலம் முடியுமட்டும் என் வீட்டில் வந்து தங்கேன்!" என்றாள்.

"முடியாது!" என்று வெட்டினாற் போல் பதில் சொன்னாள் காந்தி.

"காந்தி! நாம் இருவரும் தாயற்றவர்கள். இந்தச் சமயத்தில் சகோதரியின் உதவியாவது கிடைக்குமோ என்றுதான் அழைப்பு விடுத்தேன். உனக்கு விருப்பமில்லாவிடில் நான் வற்புறுத்த மாட்டேன். புது மணத் தம்பதிகளுக்கு இடையூறு விளைவிக்கும் எண்ணம் எனக்கில்லை." ரமா இயல்பாகத்தான் சொன்னாள்.

காந்திக்குப் பற்றிக்கொண்டு வந்தது.

"புது மணமாம்! தம்பதிகளாம்! அந்தக் குதூகலம் எனக்குக் கிட்டாது என்று தெரிந்தும் நீ எனக்கு வினாகம் செய்து வைத்தாயே, அதன் காரணம் புரிகிறது. வாசுவை நான் மணந்தால் சகோதரியைப் பார்க்கும் சாக்கில் வாசுவைப் பார்க்க வரலாம். அவரும் அதே சாக்கில் உன்னைப் பார்க்க அடிக்கடி உன் வீட்டுக்கு வருவார் என்ற எண்ணம் உனக்கு... ரூபகுமாரும் உன் இச்சையாக விட்டுவிட்டதால்..."

"காந்தி!" ரமா இடையே கூவினாள். "என்னைப் பார்த்துப் பேசு. நான் நிறைமாதக் கர்ப்பிணி. ரூபகுமார் அக்குழந்தைக்குத் தந்தை. வாசுவுக்கும் எனக்கும் சம்பந்தம் ஜோடிப்பதை நிறுத்து..."

காந்தி அவள் கூறியதைப் பொருட்படுத்தவில்லை. "ரமா! என்னிடம் நீ கதை பேச வேண்டாம். நீ ஏமாந்து விட்டாய் என்பதை உனக்குத் தெளிவுறுத்துகிறேன். உன் சகோதரிக்காக வாசு ஓடிவந்துவிட மாட்டார். அன்று ஏற்பட்ட உணர்ச்சிப் பிரமையிலிருந்து இன்னும் அவர் மாறுபடவில்லை. என்னைக் கண்டால் விலகி விடுகிறார். நான் நின்ற இடத்தில் நிற்பதில்லை. நான் சாப்பாடு பரிமாறினால் கசக்கிறது. இரவிலோ...இரவிலோ..." நெஞ்சக் குமுறலில் அவளால் பேச முடியவில்லை.

ரமா சட்டென்று தன் சகோதரியை அணைத்துக் கொண்டாள். அவள் கண்ணீரைத் தன் புடவைத் தலைப்பால் துடைத்து விட்டாள். அடுத்த கணம் விருட்டென்று எழுந்தாள். "அப்பா! நான் இப்போதே போகிறேன்."

"எங்கேம்மா?" கோசல்ராம் கேட்டார். அவர் கேள்விக்கு விடை ரூபகுமாருக்கு அவள் செய்த போனில் கிடைத்தது. "குமார் அப்பாவுக்குப்பயப்படும்படி உடம்பு இல்லை. நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் நேராக வாசுவின் வீட்டுக்குப் போகிறேன். அதனால் அங்கு வரத் தாமதமானால் கவலைப்படாதீர்கள்."

ரூபகுமார் பதில் கூறு முன்பே அவள் போனைக் கீழே வைத்துவிட்டாள். 'வாசுவின் வீட்டுக்குப் போவதாகச் சொல்கிறாளே! நிறை மாதக் கர்ப்பிணியாயிற்றே! அங்கே நெகிழ்ச்சியில் ஏதேனும் நேர்ந்துவிட்டால்..... தனித்து வேறு போகிறாளே...!'

உடனே ரூபகுமார் தன் காரை எடுத்துக் கொண்டு கோசல்ராமின் வீட்டுக்குப் புறப்பட்டான், ரமாவைப் பிடித்துவிடலாம் என்ற நோக்கில். அவன் வருவதற்குள் ரமா புறப்பட்டுப் போய்விட்டாள்.

"என்ன மாமா இது? ரமாவைத் தனியாக எதற்கு அனுப்பினீர்கள்? கோடைக்கானலுக்குப் போக வேண்டாம் என்ற போதும் அவள் கேட்கவில்லை. கிளம்பி விட்டாள். நீண்ட பயணம் காரணமாக உடலில் தளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. டாக்டரோ எங்குமே வெளியே போகக் கூடாது என்று கூறினார். உங்களுக்கு உடல் நலமில்லை யென்றதும் பதறிப்போய் ஓடி வந்துவிட்டாள்! இப்போதோ வாசுவின் வீட்டுக்குத் தனித்

## பருக்கள் மறைந்து விடுகின்றன

**சருமம், மிருதுவாகவும் மழமழப்பாகவும் ஆகிவிடுகிறது**

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின்மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள், செந்நிறத்தழும்புகள், மேலாக பரவும் படை, படர்தாமரை, கொப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி, உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

---

**சுகத்திலோ சுகவீனத்திலோ**
**பெண்கள் எப்போதும்**
**நம்பியிருப்பது**

*லோத்ரா*





ஆரோக்யத்திற்கும்
மகிழ்ச்சிக்கும்
சிறந்த டானிக்.

65 ஆண்டுகட்கும் மேலாக
புகழ்பெற்றது

**கேஸரி குடீரம் (பி) லிட்.**
15, வெஸ்ட்காட் ரோடு
ராயப்பேட்டை, சென்னை-14

தமிழ்நாட்டுக்கு ஏஜண்டுகள் :

**சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்**

மேலைக் கோபுரத் தெரு, மதுரை

---




ஸ்நானத்திற்கு
சந்தன நறுமணம் கமழும்

# மேட்டூர் சந்தன சோப்

தூய சலவைக்கு

# காவேரி பார் சோப்

# காவேரி சோப்புத் தூள்கள்



மேட்டூர் கெமிகல் &
இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை-2 ● சேலம் ஜில்லா ●
தமிழ் நாடு

துக் கிளம்பி யிருக்கிறாள்'' என்றவன் மீண்டும் காருக்கு ஓடினான்.

கோசல்ராம் இணங்கி விட்டார். அவள் தடுத்தும் கேளாமல் அந்த ஜுரத்தில் அவளோடு கிளம்பினார். காந்தியின் உடலும் பதறியது. ரூபகுமாரின் கார் கிளம்பியபோது அதில் மூவர் அமர்ந்திருந்தனர்.

வாசுவின் வீட்டை அடைந்த போதோ...தேவகி வந்து கதவைத் திறக்க... அவர்கள் உள்ளே நுழைய... அங்கு அவர்கள் ரமாவைக் கண்ட காட்சி....

சற்றும் எதிர்பாராத வகையில் ரமா திடீரென்று தங்கள் வீட்டுக்கு வந்து நிற்பாள் என்று தேவகி சிறிதும் எதிர் பார்க்கவில்லை.

''வாசு வீட்டில்தானே இருக்கிறார்?'' ரமா எடுத்த எடுப்பிலேயே கேட்டாள்.

தேவகிக்கு அவள் இப்படிக் கேட்டது பிடிக்கவில்லை. உண்மையில் ரமா வாசு இருக்கும் நேரத்தில் தன் வீட்டுக்கு வந்ததே அவளுக்குப் பிடிக்கவில்லை. இவள் காரணமாகத்தான் வாசு இன்னும் சமநிலை அடையவில்லை. இத்தனை நாட்கள் அவன் விவாகமாகாமல் இருந்தவன். அதனால் அவன் மனம் ரமாவின் மீதே லயித்திருப்பினும் அவள் அதை அதிகம் பொருட்படுத்தவில்லை. இப்போதோ அவன் விவாகமானவன். ரமாவைப் பற்றின நினைவுகள் கிளைத்தெழுந்து காந்தியை அவன் திரும்பிப் பார்க்காமல் இருப்பது நேர்மையல்ல. ரமாவின் நினைவில் காந்தியை அவன் ஒதுக்கித் தள்ளுவது இனி அவளுக்குப் பிடிக்காது. அப்படி அவன் மனத்தைக் கிளறும் சாதனங்களையெல்லாம் ஒதுக்கவே அவள் முயன்றாள்.

''வாசுவைப் பற்றி அப்புறம் கேட்கலாம். உன் அப்பாவுக்கு எப்படி இருக்கிறது? அதை முதலில் கூறு'' என்றாள் தேவகி. வாசுவைக் குறிப்பாகக் கேட்பதால் அவள் தந்தைக்கு அதிகமாக இருக்குமோ என்று மீண்டும் சந்தேகம்.

''அப்பாவுக்குப் பயப்படும்படியாக ஒன்றுமில்லை. டிங்கு ஜுரம்தான்.''

''காந்தி வரவில்லையா?''

''வருவாள். நான் அவளை என்னுடன் வரும்படி கூப்பிடவில்லை. நான் முக்கியமாக வாசுவைப் பார்த்துவிட்டுப் போகத்தான் வந்தேன். வாசு வீட்டில் தானே இருக்கிறார்?''

ரமா இப்படிப் படபடத்துப் பேசினவள் இல்லை. அவள் குணம் தேவகிக்குத் தெரியும்.

தேவகி பதில் கூறுவதற்குள்ளாகவே தன் அறையிலிருந்து வெளியே எழுந்து வந்துவிட்டான் வாசு.



அப்போலோ - 13 விண்வெளிக் கப்பல் வானத்தில் தத்தளித்துக்கொண்டிருந்த போது பூமிக்கு ரிகைவுச் செய்தி அனுப்பிக் கொண்டிருந்தது. அந்தச் செய்தியை அடுத்த டெலிப்ரின்டர் பேப்பின் நீளம்-70 லட்சம் அடி. (1300 மைல்)

ஆதாரம்: 'டைம்' தகவல்: 'நாகை'

---

முதல் பிரமிப்பு இப்போது வாசுவுக்கு இல்லை. தான் ஏமாந்துவிட்டோம் என ஆழப் பதிந்துவிட்ட எண்ணம் புதிதான கிளர்ச்சியை ஏற்படுத்தவில்லை. பொங்கி வரும் பால் அமுங்கிவிட்ட பிறகு தளதளவென்று கொதிப்பதோடு நின்றுவிடுவது போன்ற நிலையில் அவன் இருந்தான்.

''வாசுவைப் பற்றி இப்போ என்ன கேள்வி வந்திருக்கிறது?'' என்று வாசு கேட்டான்.

''கேள்வியோடுதான் நான் வந்திருக்கிறேன். இரண்டில் ஒன்று தீர்த்துப் போகும் முடிவுடன் வந்திருக்கிறேன்.''

ரமாவின் கர்ஜனைக் குரலைக் கேட்டுத் தேவகியே சற்று அதிர்ந்து விட்டாள்.

''ரமா, இன்று என்ன உனக்கு இவ்வளவு படபடப்பு?'' என்று கேட்டாள். தேவகி தன் மகனைக் கவனித்தாள். அவன் நின்றிருந்த நிலையைக் கண்டவளுக்குப் புதிதான உணர்ச்சியில் அவன் சிக்கிவிட மாட்டான் என்ற ஆறுதல் ஏற்பட்டது.

தேவகி கூறியதை ரமா காதில் வாங்கிக்கொண்டதாகத் தெரியவில்லை.

''வாசு, என் தங்கையின் வாழ்வைக் கோரி நான் இப்போது உங்களிடம் வந்திருக்கிறேன். என் சகோதரியை நீங்கள் திரும்பிப் பார்க்காத காரணம் எனக்குத் தெரிய வேண்டும்.''

''ஒருவர் கேள்விக்கும் நான் பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கவில்லை.'' வாசுவும் சளைக்காமல் பதிலளித்தான்.

''வேறு விஷயத்தில் நீங்கள் சுதந்திரமாக இருக்கலாம். நீங்கள் இப்போது தனிப்பட்ட மனிதன், பிரம்மச்சாரி இல்லை. உங்கள் வாழ்க்கையோடு பிணைத்து நீங்கள் ஒருத்தியை ஏற்றுக் கொண்டு விட்டீர்கள். அந்தத் தாயில்லாப் பெண்ணுக்காக நீங்கள் எனக்குப் பதில் சொல்லித்தான் ஆக வேண்டும்.''

''ரமா! போய்விடு இங்கிருந்து. நீ மேலும் கேள்விகள் கேட்டுக் கொண்டு நின்றிருந்தால் என்ன நடக்குமென்று நான் சொல்ல முடியாது.'' வாசு கர்ஜித்தான். (அடுத்த இதழில் முடியும்)

# பிள்ளைக்கனி அமுதே.....

## விஜயா பாலகிருஷ்ணன்

என் பிள்ளை படிக்கும் 'கிண்டர் கார்டன்' பள்ளியிலிருந்து அவசரமாக எனக்கு அழைப்பு வந்தது. என்னமோ ஏதோ என்று காரை எடுத்துக் கொண்டு ஓடினேன். அங்கே ஒரே பரபரப்பு. அத்தனை டீச்சர்களும் வெளியே நின்றபடி எதைப் பற்றியோ இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். பள்ளிக்கூடத்தில் திருட்டுதிருட்டுப் போயிருக்கும் அல்லது தீப்பற்றிக் கொண்டிருக்கும் என்று எண்ணினேன். ஆனால் என்னை ஏன் அழைக்க வேண்டும்? போலீஸைத்தானே, தீயணைக்கும் படையைத்தானே அழைக்க வேண்டும்; எனக்கும் பள்ளிக்கூடச் சம்பந்தம் கிடையாதே!

என் தலை தெரிந்தவுடன் 'பெரிய டீச்சர்' என்ற வயதான மாது மட்டும் அங்கே தங்கினாள். மற்ற டீச்சர்களை அப்பால் போகும்படி கட்டளையிட்டாள். என்னைப் பலவந்தமாக ஒரு தனி அறைக்கு அழைத்துச் சென்றாள். ஜன்னல்கள், கதவுகள், சாவித் துவாரங்கள் எல்லாவற்றையும் மூடினாள். பிறகு மிகவும் கடுமையாக, ''உங்களிடம் உங்கள் பிள்ளையைப் பற்றி இரகசியமாகப் பேச வேண்டும்'' என்றாள்.



''அவனுக்கு உடம்பு சரியாயில்லையா?'' என்று கேட்டேன் கவலையுடன்.

''உடம்பெல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது. இப்பொழுதுகூடப் பக்கத்தில் இருக்கும் பிள்ளைகளின் 'கேக்'கை எல்லாம் பிடுங்கித் தின்று விட்டான்.''

''பின் வேறு என்ன விஷயம்?''

''இன்று எங்கள் பள்ளிக்கே அபகீர்த்தி தேடித் தந்துவிட்டான் உங்கள் அருமைப் பிள்ளை. மாதத்துக்கு ஒரு முறை ஹெலிகாப்டரில் வந்து இங்கு விஜயம் செய்வார் எங்கள் எச். எம். (தலைமை உபாத்தியாயினியைக் குறிக்கும் இந்த மந்திரச் சொற்களை உச்சரிக்கையில் மரியாதை காரணமாக டீச்சரின் குரல் மிகவும் தாழ்ந்தது). வழக்கம்போல் பிள்ளைகளிடம் கேள்வி கேட்கத் தொடங்கினார் அவர். 'இந்தியாவின் உப ஜனாதிபதி யார்?' 'விண்வெளிக்குச் சென்ற வீரர்களின் பெயர்களைச் சொல்', 'ஆஸ்திரேலியாவின் ஜனத்தொகை என்ன?' 'குதிரைக்கு வாயில் எத்தனை கடைவாய்ப் பற்கள்?' என்று கேட்டுக் கொண்டே வந்தார். உங்கள் குழந்தையும் டாண் டாணென்று பதில் சொல்லிக் கொண்டு வந்தது. எங்களுக்கு ஒரே மகிழ்ச்சி! கடைசியில் 'பெரியவனானவுடன் நீ என்னவாகப் போகிறாய்?' என்று கேட்டார். உங்கள் அருமைப் பிள்ளை என்ன சொன்னான் தெரியுமா? ''நான் 'முகமூடி' (Phantom) யாக மாறிக் குதிரை மீது வீரனாகப் போகப் போகிறேன்'' என்றான். எச்.எம். மூஞ்சி செத்து விட்டது! எங்களை யெல்லாம் கண்டபடி திட்டினார். இத்தனைக்கும் நாங்கள் பிள்ளைகளுக்குச் சரியான விடையைக் கற்பித்திருக்கிறோம். 'நான் பாரத நாட்டின் ஜனாதிபதியாவேன்', 'சர் சி. வி. ராமனைப் போல் விஞ்ஞானியாவேன்', 'சரோஜினி தேவியைப் போல் கவிக் குயிலாவேன்', 'இந்திரா காந்தியைப் போல் பெண் பிரதமராவேன்', 'பிளாரன்ஸ் நைட்டிங்கேலைப் போல் நர்ஸாவேன்', பெரிய டாக்டராவேன், என்ஜினீயராவேன் என்று ஒவ்வொரு பிள்ளைக்கும் பெண்ணுக்கும் தனித் தனியே போதித்திருக்கிறோம். நேற்று வரையில் சரியான விடைகளைச் சொல்லி வந்த பிள்ளைக்கு இன்று என்ன நேர்ந்து விட்டதோ? எச். எம். கோபம் தணியவே இல்லை! எல்லாம் வீட்டில் நீங்கள் கொடுக்கும் இடம் தான்! குழந்தை காணும் படியாக 'முகமூடி' போன்ற புத்தகங்களைப் போட்டு வைக்கக் கூடாது. நல்ல விஷயங்களைப் பற்றியே எப்பொழுதும் பேச வேண்டும். தினமும் தூங்கும் முன் குழந்தைக்கு ஒரு நீதிக் கதையாவது சொல்ல வேண்டும்'' என்று எனக்கு நீதி போதனை செய்தார் டீச்சர்.

அவர் அவ்வளவு நேரம் சொன்ன பிறகு நான் சும்மா இருக்கக் கூடாதல்லவா? கணவரிடம் விஷயத்தை எடுத்துக் கூறினேன். ''இன்று முதல் தினமும் இரவு படுக்கப் போகும் முன் குழந்தைக்கு ஒரு நீதிக்கதை சொல்வது உங்கள் பொறுப்பு'' என்று நான் சொல்லவும் அவர் கடகடவென்று சிரித்தார்.

''அந்த டீச்சருக்குப் பைத்தியமா, உனக்குப் பைத்தியமா? குழந்தையின் 'ஒரிஜினாலிட்டி'யை மெச்சாமல் குற்றப் பத்திரிகை படித்த அந்த டீச்சரை....''

''இந்த வக்ர புத்திதான் பிள்ளைக்கும் வந்திருக்கிறது. எதையும் தாக்கி எறிந்து பேசுவது! அவன் எதிரில் 'முகமூடி' 'மன்னன் கட்டி' என்று நீங்க படிக்கக் கண்டுதானே அவன் கன்னாபின்னாவென்று பதில் சொல்கிறான்? நீங்கள் கொஞ்ச நாளைக்கு வாயை மூடிக் கொண்டிருங்கள், நான் அவனை அடியோடு மாற்றி விடுகிறேன்'' என்றேன்.

''மெச்சினேன் மாதே, உன் கடமை உணர்ச்சியை! நீயன்றோ இலட்சியத் தாய்? உன் உத்தம புத்திரன் வீர சிவாஜியாக மாறிச் சாப்பாட்டுக் கூடையில் சவாரி செய்யட்டும்! கலிலியோவாக மாறித் தூரத்தில் போகும் அழகிகளைப் பார்க்க உதவும் 'டெலிஸ்கோப்' கண்டுபிடிக்கட்டும்!'' என்று நாடக பாணியில் ஏதோ சொல்லி விட்டு அங்கிருந்து நகர்ந்து விட்டார்.

நான் குழந்தைக்கு முதலில் சொன்ன நீதிக் கதை 'வாலிபனும் கத்தியும்' என்ப

தாரும். ஆட்சேபகரமான விஷயம் ஏதாவது கதையில் இருக்கிறதா என்று ஆயிரம் முறை நானே 'சென்ஸார்' செய்த பிறகு கதையைத் தொடங்கினேன்.

"ஒரே ஒரு ஊரில் வாஷிங்டன், வாஷிங்டன் என்று ஒரு நல்ல பையன் இருந்தான். .."

"நல்ல பையன் கதை எல்லாம் வேண்டாம் அம்மா. 'ராக் அண்டு ரோல்'னு என்ன அம்மா?"

"குழந்தை, சமர்த்தோ இல்லியோ? கதையைக் கேள். வாஷிங்டனுக்கு அவன் பிறந்த நாளன்று அவன் அப்பா ஒரு கத்தியைப் பரிசாகத் தந்தார்."

"சீ! கத்தியா! ஹெலிகாப்டர், துப்பாக்கி, ராக்கெட் எல்லாம் இருக்கையிலே கத்தியா? சீ! இந்தக் கதை வேண்டாம்."

"முழுக்கக் கேளுடா! ரொம்ப ஜோராக இருக்கும்!"

"கதையிலே டார்ஜான் வருவானா? எல்லாரையும் கும் கும்னு குத்துவானா? ஜேம்ஸ்பாண்ட் பெல்ட் அணிந்து கொண்ட முகமூடி வருவானா?"

"இதோ பாரு...குறுக்கே பேசினால் அடிப்பேன்."

"எனக்குக் கதை வேண்டாம் அம்மா. நீ போய்ப் பாப்பாவுக்கு டிரஸ் தை... இல்லாவிட்டால் அப்பாவுக்குச் சாப்பாடு போடு..."

"வாஷிங்டன் வீட்டிலே ஒரு பெரிய தோட்டம் இருந்தது. அதிலே நிறைய ரோஜாச் செடி. அவன் அப்பாவுக்கு ரோஜா என்றால் உயிர். பிறந்த நாள்



பரிசான கத்தியினுல் வாஷிங்டன் ஒரு ரோஜாச் செடியை வெட்டிவிட்டான்.''

''கதை முடிஞ்சுதா அம்மா ? எனக்குத் தூக்கம் வருகிறது.''

''கேளுடா, ரோஜாச் செடியை யார் வெட்டினதுன்னு வாஷிங்டனின் அப்பா கத்தினுர். வாஷிங்டன் எப்பொழுதும் உண்மையையே பேசுவான் ! அவன் அப்பாவிடம் உண்மையை ஒப்புக் கொண்டான்....''

''உடனே பாதி ராஜ்யமும் ராஜகுமாரியும் கிடைச்சுதா? எங்க டீச்சர் சொல்ற கதைகள் இப்படித்தான் முடியும். என்னைக் கேட்டா வாஷிங்டன் முதுகிலே பொத்துப் பொத்துனு ரெண்டு அடி கிடைச்சிருக்கும். அப்பாவுக்கெல்லாம் அடிக்கத்தானே தெரியும்?''

எங்கிருந்தோ என் கணவர் சிரிக்கும் சத்தம் கேட்டது. எனக்குக் கோபம் கோபமாக வந்தது. அவர் சிரிப்பை இலட்சியம் செய்யாமல் கதை சொல்வதைக் கடமை உணர்ச்சியுடன் தொடர்ந்தேன். ''வாஷிங்டன் உண்மையை ஒப்புக் கொண்டதை மெச்சினுர் அவன் தந்தை. அந்த வருஷம் கிறிஸ்துமஸ் பண்டிகையின்போது அவனுக்கு ஒரு பெரிய பூச்செண்டைப் பரிசளித்தார். ஆமாம், இந்தக் கதையின் நீதி என்ன?''

''நீதின்னு என்ன அம்மா ?''

''இந்தக் கதையிலிருந்து நீ என்ன தெரிந்து கொள்கிருய் ?''

''குழந்தைகளுக்கு அப்பாவெல்லாம் கத்தி தரக் கூடாது!''

அதற்குப் பின் நான் அவனுக்குச் சொன்ன கதைகள் எத்தனையோ ! 'புலி வருகிறது ! புலி வருகிறது!' என்ற கதைக்கு அவன் சொன்ன நீதி என்ன தெரியுமா ? ஆடு மேய்க்கும் ஒவ்வொரு பையனுக்கும் 'டுமீல்' 'டுமீல்' என்று சத்தம் எழுப்பும் துப்பாக்கி தர வேண்டும் ! 'திராட்சை புளிக்கும்' என்று சொல்லி விட்டுப் போன நரிக்கு உயரே குதிப்பதற்குச் சர்க்கஸ் பயிற்சி தரவேண்டும்! 'அராபியனும் ஒட்டகமும்' என்ற கதை கற்பிக்கும் பாடம் என்ன தெரியுமா? கூடாரத்தில் குறைந்தது இரண்டு அறைகளாவது இருக்க வேண்டும் ! ஆமையும் முயலும் என்ற கதைக்கு என்ன நீதி தெரியுமா ? நன்ருக ஓடத் தெரிந்த பையன்கள் இருக்கும்போது ஆமை, முயல் என்று அசட்டுத்தனமாக ரேஸ் விடக் கூடாது! "காகமும் நரியும்" கதையிலிருந்து தெரிந்துகொள்ளும் பாடம் என்ன? நரி வீட்டில் எச்சில் கிடையாது. பாட்டி யாரும் கிடையாது...காகம் கடித்துப் போட்ட வடையைத் தின்கிறதே அது ! சனி!

பின்னே இனிமேல் உருப்படாது என்று நான் எண்ணி வருந்திக் கொண்டிருந்தபோது, மீண்டும் பள்ளியிலிருந்து அவசர அழைப்பு வந்தது. பயந்து கொண்டே ஓடினேன். புன்னகையுடன் வரவேற்ருர் டீச்சர். உட்காருவதற்கு நாற்காலி எடுத்துப் போடச் சொன்னுர். மற்ற டீச்சர்களும் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். சுற்றிலும் குழந்தைப் பட்டாளம் வேறு !

என் குழந்தையைப் புகழ்ந்து ஒரு பெரிய பிரசங்கம் செய்தார் டீச்சர். மற்றப் பிள்ளைகளிடம் அவனைப் பின்பற்றச் சொன்னுர். அவனைப் பாராட்டி 'கிளாப்' செய்யச் சொன்னுர். அவனை எடுத்து முத்தமிட்டார். மற்ற டீச்சர்களும் அப்படியே செய்தார்கள்.

''இன்று எச். எம்.மிற்கு ஒரே மகிழ்ச்சி. சுகாதார மந்திரியின் பெயர், டென்மார்க்கின் தலைநகரம், ஷாஜஹானின் மூன்றுவது மகனின் பெயர், கூட்டல் கழித்தல் வாய்ப்பாடு, நீ பெரியவனுனபின் என்ன செய்யப் போகிருய் என்று என்னென்னவோ கேட்டார். அத்தனைக்கும் அழகாகப் பதில் சொன்னுன் உங்கள் குழந்தை. ஏன்டா கண்ணு... வாட் ஈஸ் யுவர் நேம் ?''

''போங்க டீச்சர், எப்பொழுதும் இதையே கேட்டுக்கிட்டு. என் பெயர்தான் உங்களுக்குத் தெரியுமே. இனிமேல் கேட்டால் மை நேம் ஈஸ் மங்கி என்பேன்....''

''நீ பெரியவனுனவுடன் என்ன ஆகப் போகிருய் ?''

''முகமூடி ! குதிரையிலும் போவேன் ; ராக்கெட்டிலும் பறப்பேன் !''

''என்னது? சற்றுமுன் எச். எம். கேட்டபோது விண்வெளி வீரனுகப் போகிறேன் என்ருயே !''

''நான் அப்படிச் சொல்லாவிட்டால் எச். எம். உங்களைக் கோபிப்பார்; நீங்க அம்மாவைக் கூப்பிட்டு நீதிக் கதைகள் சொல்லச் சொல்லீங்க..... எனக்குப் போர் அடிக்கும்! அதுக்காகத்தான் !''

[வாசகர்களே! இந்தக் கதையின் நீதி என்ன?]

"வாப்பா...ராஜு..." — அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்தவள், முறத்தைக் கீழே வைத்து விட்டு எழுந்திருக்கிறாள்.

சட்டையைக் கழற்றிவிட்டு, கைகால் கழுவிக் கொண்டு ஊஞ்சல் பலகையில் உட்காருகையில் அம்மா காப்பியுடன் வருகிறாள்.

"என்ன ராஜு திடீர்னு... இப்படி... ஆபீஸ் விஷயமாகப் பக்கத்திலே எங்கேயும் வந்தியா....?"

ராஜு அம்மாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு விநாடி தானே குழந்தையாக அவன் அணைப்பில் நிறைவது போன்ற பிரமை; மறுவிநாடி தான் ஒரு குடும்பத் தலைவன் என்ற நினைப்பில் தளர்ந்து நிற்கிறான்.

"என்னம்மா... என்ன கேட்டே? ஆபீஸ் விஷயமா வந்தேன்னு? இல்லே. குழந்தைகளுக்கெல்லாம் லீவு விட்டாச்சு. இந்த வருஷம் அங்கே வரச் சொல்லி எழுதியிருந்தான். ஒரு வாரம் லீவு எடுத்துக் கொண்டு அவளையும் குழந்தைகளையும் விட்டேன்.... அவா தான் வரல்லே. நாமாவது நாலு நாட்கள் அம்மாகிட்டே அக்கடான்னு இருப்போமென்னு வந்தேனம்மா..."

போன தடவைக்கு இந்தத் தடவை இன்னும் தலையெல்லாம் நரைத்துத் தளர்ந்தும் போய்விட்டாள். அவன் இலேசாகக் கண்களை மூடிக்கொள்கிறான். கோபு, ராஜு, கோமு— மூவரும் குழந்தைகளாக அவளைச் சுற்றிக் கொள்கிறார்கள்..... இன்று எல்லோரும் பெரியவர்கள்.

கஷ்டமோ சுகமோ தாங்களாகவே அனுபவித்துக் கொள்ள வேண்டியவர்களாகி விட்டார்கள். ஒன்று சேரும்போது ஒருவருக்கொருவர் ஆறுதல் வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம்....!

சாப்பிடுகையில் அம்மா கத்தரிக்காயிலும் வெண்டைக்காயிலும் புரியும் ரஸவாதத்தை அவன் சுவைத்துச் சாப்பிடும்போது அவள் சிரித்துக் கொள்கிறாள்.



"ஏம்பா, நாங்க வேறு என்னத்தைச் சாதிச்சுட்டோம்? வீட்டைப் பெருக்கி மெழுகுவது, தேய்த்துக் குளிப்பது, வேளைக்குச் சமைக்க வேண்டியது, சாப்பிட வேண்டியது — நாள் முழுதும் இதுக்கே சரியாய்ப் போய்விடும்" — அம்மாவின் கூற்றை அவன் ஒப்புக் கொள்ளவில்லை.

'அதுலேதானம்மா இருக்கு...அந்தக்காலத்திலே அப்பாவோட கொறைஞ்ச சம்பளத்திலே எங்க மூணு பேரையும் வளர்த்து ஆளாக்கினதன் அடிப்படைதான் அது'— அம்மாவின் அருந்திய தியாகத்தில் அவன் கரைந்து நிற்கிறான்.

அவனுக்கென்ன, அறுநூறு ரூபாய் சம்பளம் பட்டணத்தில்... வருமானத்துக்குச் சரியாய்க் குழந்தைகள். ஐந்து குழந்தைகளும் அவனுடைய திறமைக்குச் சவால் விடுவது போல் சவால்விடுகிறார்கள். மூத்த பிள்ளையை மெடிகல் லைனில் திருப்பலாமென்று எண்ணம். இன்னும் நான்கு வருஷங்கள்போனால் கல்யாணத்துக்குத் தயார் என்பது போல் பெண்

ணின் வளர்ச்சி... சாருவுக்கு அந்தக் கவலை இல்லையா? ஆனால் அது எப்போதும் நிலைத்து நிற்பதில்லை. அம்மாவைப் போல் நாள் முழுவதும் அவள் அடுப்போடு அலைவதில்லை. கதையில் வரும் பூதத்தைப் போல் நவீன சமையல் சாதனங்கள் அவளுக்கு அரை மணி ஒரு மணியில் வேலையை முடித்துக் கொடுத்து விடுகின்றன. பட்டணத்தின் பரபரப்புக்கு நேரத்தையும் பணத்தையும் கொட்டும் போது எல்லாமே மறைந்து போகிறது. பட்டண வாழ்க்கையே ஒரு போதைதானே!

அம்மாவின் கவனிப்பு இப்போது செடிகளிலும் பிஞ்சாகக் காயாகக் கனியாகப் பிரதிபலிக்கிறது.

''ராஜு! எப்போ வந்தே?'' அப்பா அவனைத் தேடித் தோட்டத்துக்கு வருகிறார்.

பரஸ்பர விசாரிப்பெல்லாம் சில நிமிஷங்களில் முடிந்துவிடும். அதன் பிறகு அவர் ஆனாலும் அம்மாவின் குரலில் தெளிந்தோடிய பக்திப் பிரவாகத்தைக் குறைத்துச் சொல்ல முடியுமா?

''ஏதுக்கடா, இதெல்லாம்...?'' இருந்தாலும் அம்மாவின் முகத்தில் பெருமை பூரிக்கத்தான் செய்கிறது.

இதைவிடப் பெரிய பொருள்களை அவன் தன் வீட்டில் வாங்கிப் போட்ட போது தோன்றாத மகிழ்ச்சி, இப்போது அம்மாவுடன் சேர்ந்து குமிழ் விடுகிறது.

''உனக்கொன்றும் கஷ்டமில்லேம்மா. அஞ்சிலிருந்து ஏழு நிமிஷம்வரையில் சுற்றும்.. நீ இதுகிட்ட இருக்கணுமென்பதில்லே. நாளாகப் பாரு, உனக்கே பழகிவிடும்...''

மறுநாள் காலையில் அம்மாவின் கையால் பழைய சாதத்தைச் சாப்பிட்டு விட்டு அப்பாவுடன் வயலுக்குக் கிளம்புகிறான்.



# ஏக்கம் இருவகை

கமலா தோதாத்ரி

''பழையதெல்லாம் இப்போ சாப்பிடறயா...?'' தொட்டுக்கொள்ள அம்மா கீரைக் குழம்பை ஊற்றும் போது நாக்கில் நீர் சுரக்கிறது.

''எங்கேம்மா..... எல்லாம் அதோடு சரி...இப்பத்தான் தூங்கி எழுகிறதுக்குள்ளே உன் நாட்டுப் பெண் சமையல் பண்ணி, டிபனும் தயார் பண்ணி விடுகிறாளே... அதுவும் தவிர, பழைய சமாசாரங்களெல்லாம் உடம்புக்கு ஒத்துக் கொள்ள மாட்டேனென்கிறது..... பச்சைத் தண்ணீர்லே குளிச்சா மூக்கை அடைச்சிக்கிறது... ஏதோ சின்ன ஆபரேஷன் பண்ணணுமாம்....''

அவனிடம் பேசுவதெல்லாம் பம்பு செட்டுகளைப் பற்றியும் பல்வேறு சாகுபடி முறைகளைப் பற்றியும்தான்.....இடையில் அவன் அனுப்பியிருந்த புத்தகங்களைப் பற்றித்தான். உண்மையில் அப்பாகூட அம்மா என்ற பெரிய வட்டத்துக்குள் தம்மையும் இணைத்துக் கொண்டு விட்டார்!

''இதோ பாரும்மா, ரிக்கார்டு ப்ளேயர். உனக்குப் பிடிச்ச ரெக்கார்டு எல்லாம் இருக்கு.'' சாவகாசமாக அப் பெட்டியைத் திறந்தான் ராஜு.

அவன் ரெக்கார்டு ப்ளேயரை ரேடியோவுடன் இணைக்கிறான். பெரியவன் போன தடவை வந்திருந்தபோது அந்த ரேடியோவைக் கொண்டு வந்தான் என்றாள் அம்மாள்.

பாவயாமி ரகுராமம்... ரிகார்டு சுழலச் சுழல ஸ்பீக்கரிலிருந்து நாதம் இழைகிறது. அம்மா அதோடிணைந்து மெதுவாகப் பாடுகிறாள்.... அந்த இனிமை இல்லைதான்;

வயற்காட்டிலிருந்து திரும்பும்பொழுது பகல் இரண்டு மணியாகி விட்டது. 'இந்த வருஷம் பரவாயில்லே. நல்ல விளைச்சல்... ஏதோ நன்று விளைஞ்சால் உங்களுக்குக்கூட அனுப்பலாம், பாரு...' அப்பாவின் உழைப்பு நெல் மணிகளாகப் பளபளக்கிறது. அவன் என்ன செய்கிறான்...பேப்பரில் எழுதி எழுதி.. அன்புரொடெக்டிவ் லேபர்....!

அம்மா கடிதத்தை அவனிடம் கொடுக்கிறாள். கோமு எழுதியிருந்தாள். அவள் கணவர் வேலை விஷயமாக டெல்லிக்குப் போவதால், தான் அம்மாவுடன் வந்து ஒரு மாசம் சீராடப் போகிறாளாம். நாளை வருவதாக எழுதியிருந்தாள்.

''அம்மா, நான்கூடக் கோமுவைப் பார்த்து நாளாச்சு...''



" அடேடே, கிட்டுவா ! ரெண்டு வருஷத்துக்கு முன்னுலே உங்களைப் பார்த்தது. பாங்கில் கேஷியரா இருந்தீங்களே, இப்பவும் அங்கேதான் இருக்கீங்களா ?"

" இல்லே. 'சிறைச்சாலையில் என் அனுபவங்கள்' என்று ஒரு புஸ்தகம் எழுதிக்கிட்டிருக்கேன்."

ராஜு பிளாட்பாரத்தை இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடி வரை நோட்டம் விடுகிறான். கோபு ராஜு கோமு — மூன்று பேரும் தினமும் ரயிலில் ஏறிப் பக்கத்து ஊர் உயர்நிலைப் பள்ளிக்கூடத்தில் படித்தவர்கள். அம்மா செய்து கொடுக்கும் முறுக்கையோ வடையோ வாயில் வைத்துக் கடித்துக் கொண்டு, புத்தகம், டிபன்பாக்ஸ் சகிதம் ரயிலில் இடம் பிடிக்க ஓடும் நினைவு கண் முன் நிழலாகப் படருகிறது. இன்று போல் கவலைகளைக் கூடையாக மனத்தில் சுமந்து திரிவோம் என்று அன்று நினைத்ததாவது உண்டா?

அம்மாவும் அப்பாவும் அன்று போல்தான் இருக்கிறார்கள்...சிரிப்புக்கு கூட பொறுமை சாயல்கூடத் தட்டுகிறது. பெரியவனைப் படிக்க வைத்தார்கள். இன்று தூர்க்காபூரில் இஞ்சினியர். ராஜு எம். ஏ. பாஸ் செய்து விட்டு ஒரு கம்பெனியில் அக்கௌண்டெண்டாக இருக்கிறான். கோமுவையும் குறையில்லாமல் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார்கள். குறைப்பட்டுக் கொள்கிற ஜீவன்கள் அவர்கள்தான். கோபுவுக்கு ஆண் குழந்தை இல்லையே என்று குறை. அவனுக்கு வயது நாற்பத்தைந்து ஆகிறது. ஒரே பெண்தான்.

'டேய் ராஜு, உனக்கென்னடா! இரண்டு பெரிய பசங்க. இன்னிக்குக் கஷ்டப்பட்டாலும் தென்னை மரம்போல நாளைக்கே உனக்கு ஒத்தாசையாய் இருப்பாங்க' என்பான்... கோமுவுக்குக் குழந்தைகள் இல்லை. இதை யொட்டி ஓர் இடம் பாக்கி யில்லாமல் சுற்றி வந்ததுதான் மிச்சம். ஆயுசுக்கும் வேண்டிய மருந்துகளைச் சாப்பிட்டதுதான் கண்ட பலன்.

பெருத்த இரைச்சலுடன் குலுங்கி நிற்கிறது வண்டி. ஸ்டேஷன் மாஸ்டர் அறையில் பேப்பர் படித்துக் கொண்டிருந்த அப்பா, பிளாட்பாரத்துக்கு வருகிறார்.

''ராஜு... அப்பா...'' கோமுவின் குரல் தான். முதல் வகுப்பு வண்டியிலிருந்து கோமுவுடன் இறங்குவது... கோபுவா...?

''என்ன இப்படித் திடீர்னு தகவல் இல்லாமல்...'' ராஜுவும் அப்பாவும் கேள்வியை ஆச்சரியமாக வைத்தபோது அவன் சிரித்துக் கொள்கிறான்.

''ஆமாம். உங்களை யெல்லாம் ஆச்சரியத்தில் ஆழ்த்தணும்னுதான்...பட்டணத்துக்கு ஆபீஸ் விஷயமாக வந்தேன். உன் வீட்டில் விசாரித்தபோது உன் மாமனார் வீட்டுக்குப் போயிருப்பதாகச் சொன்னார்கள். அதனால் கோமுவைப் பார்க்க வந்தேன். அவளோ, இங்கே கிளம்பிக் கொண்டிருந்தாள்...நானும் கிளம்பிவிட்டேன்....''

அம்மா கொல்லைக்கும் வாசலுக்குமாகப் பறந்து பறந்து வேலை செய்கிறாள். தன் வயிற்றில் பிறந்த மூன்றும் ஒன்று சேர வந்ததில் மனம் கொள்ளாப் பெருமை. நடுநடுவே குழந்தைகள் வராததையும் பாலையில் செய்து வைத்திருக்கும் பட்சணங்கள் சீந்துவாரில்லாமல் கிடப்பதையும் சொல்லிச் சொல்லி அங்கலாய்க்கிறாள்.

''அதனுலென்னம்மா, பேரன் பேத்திகளுக்கெல்லாம் சேர்த்து நாங்க இருக்கிறோமே... கொண்டு வந்து வை, பார்ப்போம்'' என்று விளையாட்டாகச் சட்டைக் கையை உயரே தூக்கி விட்டுக் கொண்டான் ராஜு.

அம்மாவின் திறமையான தயாரிப்புகள் அவன் கட்டிக் கொண்டிருக்கும் பற்களுக்குப் பொறுக்கவில்லை! பரிதாபமாகச் சமாளிக்கும் பிள்ளையை ஆதங்கத்துடன் பார்க்கிறாள் அவள்.

இரண்டு தினங்களாகக் கொல்லை அல்லோலகல்லோலப்படுகிறது. கோபு தான் கொண்டு வந்திருந்த ஏதேதோ பூச்செடிகளின் விதைகளைத் தெளிக்கிறான். விளா இழுக்க ராஜு இறைத்துக் கொடுக்கும் தண்ணீரை மூக்க மூகவென்று இரைத்துக் கொண்டு செடிகளுக்கு ஊற்றுகிறாள் கோமு.

பிறந்ததுகள் படும் அவஸ்தையை வேதனையும் விளையாட்டுமாய் ரசிக்கிறாள் அம்மா.

''அம்மா, இந்தா பார்த்தியா... ப்ரிட்... ஃப்ரிஜ்த்திலே இட்டிலியாப் பண்ணி அடுக்கிடலாம்...''

''ஆமாண்டியம்மா, இட்டிலி பண்ணி அடுக்கினுல் தின்கிறதுக்கு யாரு இருக்கா...? தெரியாத காரியம்... இலுப்பச் சட்டியிலே ரெண்டு ஏடு ஊற்றினுல் ஆச்சு...''

அம்மாவின் உள்ளத்தில் ஆற்றுமை இல்லாமலா... இருந்தாலும் 'ப்ரிடில்' வைத்தெடுத்த இட்டிலிகளை எடுத்துப் பரிமாறியபோது பெருமை இல்லாமலில்லை.

லீவு முடிந்துவிட்டது. நாளை ஆபீஸில் இருக்க வேண்டும். ஆனால் இந்த இனிய சூழலிலிருந்து அவ்வளவு சீக்கிரம் விடுபட மனம் வரவில்லை. கார்டைக் கையில் எடுக்கும் போது இன்னும் ஒரு வாரம் கேட்டு எழுத மனம் தூண்டுகிறது.

கோமுவின் கூந்தலைப் பின்னி முடித்துத் தோட்டத்து மலர்களை அவள் தலையில் சூட்டுகிறாள்.

''அம்மா! நானும் பின்னிக்கிறப்போ... படிப்பில் இருப்பதை எப்படியம்மா நீ இடுப்பு

# அருமையான சுவை என்பது
## ஒரு விஷயம், சக்திமிக்க போஷாக்கு



# என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

அந்தப் போஷாக்கைப் பெறுவதற்குதான்
எவ்வளவு கரகரப்பான, சுவைமிக்க வழி!
பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகளில் பால்,
கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல
அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன—
புரதங்களும் வைட்டமின்களும்
அபரிமிதமாக அடங்கியுள்ளன.




எனவே

## பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகள்

இந்தியாவின்
மிக அதிகமாக
விற்பனையாகும்
பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குவதில் வியப்பில்லை

everest/800/PP tm

வரையில் கொண்டுவந்தே...'' முப்பத்தைந்து வயதுக் குழந்தைதான் அவள்!

அவரவர் இடத்தில் எப்படியோ, அம்மாவின் முன்னால் எல்லோரும் குழந்தைகளாகத் திரிகின்றனர்!

அப்பா பஞ்சாங்கத்தைப் புரட்டுகிறார்.

''அப்பா! நான் பார்த்துச் சொல்லுகிறேன். நான் ஊருக்குப் புறப்படணும்.''

''என்னடா அவசரம்? வந்து பத்து நாட்கள் ஆகல்லே...'' இந்தக் கோலாகலம் அவரையும் பற்றிக் கொண்டுவிட்டதோ?

''பஞ்சாங்கத்தைப் பார்க்கிறது எதுக்குத் தெரியுமா? உங்க அம்மாவுக்கு இந்த மாசம் ஜன்ம நட்சத்திரம் வரும்.... அதான் பார்க்கிறேன்...''

''ஆமாம், அவருக்கு என்ன வேலை இதைப் போய்ப் பார்த்துக்கொண்டு....'' அம்மாவின் குரலில் வெட்கம் — பெருமிதம்!

''ஏண்டா, வயசாகிறதேன்னு பார்க்கிறயா?'' அப்பா பதிலுக்குச் சீண்டுகிறார்.

அம்மாவுக்குப் பிறந்த நாள். அதுகூட நினைவில்லை. அம்மா, அப்பாவின் தொடர்பை அறுத்துக்கொண்ட மாதிரிதான் வாழ்க்கை ஓடுகிறது — இப்படி ஒன்றிவே இரண்டிலே சந்திப்பதைத் தவிர.

---

# ஈர்க்கி கணவாய் மீன்

ஈர்க்கி கணவாய் மீன்கள் தென்னிந்திய கடற்கரைப் பகுதிகளிலெல்லாம் கோடைக்கால இறுதியில் ஏராளமாகப் பிடிக்கப்படுகின்றன. இவை மனிதனுக்கு உணவாகப் பயன்படுகின்றன. இதன் உடலமைப்பை நோக்கும்போது மீன் என்றே நமக்குத் தோன்றுது. ஈர்க்கி கணவாய் மீனுக்கு ஆங்கிலத்தில் ''லாலிகோ'' என்று பெயர்.

ஈர்க்கி கணவாய் மீனுக்கு பத்துக் கைகள் உள்ளன. கைகளில் உறிஞ்சி ஒட்டக்கூடிய (Suckers) அமைப்புகள் உள்ளன. இதனுடைய கண்கள் இரண்டும் எடுப்பாகக் காணப்படுகின்றன. ஆனால் இமைகள் கிடையாது. இதனுடைய தலையின் அடிப்பாகத்தில் தண்ணீரை உறிஞ்சி வெளியிடக்கூடியதான ஒருவகை உறிஞ்சிக் குழாய் இருக்கிறது. அது எப்பக்கமும் வளையக்கூடிய தன்மை வாய்ந்தது. ஈர்க்கி கணவாய் மீன் தனது உணவைப் பிடித்துவிட்டால் போதும். பிடிபட்ட பிராணி தப்பவே முடியாதபடி தன்னுடைய கைகளிலுள்ள உறிஞ்சி ஒட்டக்கூடிய அமைப்புகளின் உதவியால் நன்றாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுகிறது. பின்பு மிக நிதானமாக உண்ணத் தொடங்குகிறது. ஈர்க்கி கணவாய் மீன்கள் வியத்தகு வகையில் தங்களுடைய உடலின் நிறத்தை மாற்றிக்கொள்ளும் தன்மை வாய்ந்தவை. வெள்ளை நிறத்திலிருந்து இளஞ் சிவப்பு நிறத்திலும் பின்னர் கருஞ் சிவப்பு நிறத்திலும் பின்பு வெளிறிய நீல நிறத்திலும் மாறி மீண்டும் வெள்ளை நிறத்துக்கே வந்து விடுகின்றன. இத்தகைய நிறம் மாற்றும் தன்மையால் ஒரே ஈர்க்கி கணவாய் மீன் நான்கு அல்லது ஐந்து வெவ்வேறு வகைப் பிராணிகள் போன்று தோற்றமளித்துத் தன் எதிரிகளிடமிருந்து தப்பித்துக்கொள்வதோடு மட்டுமல்லாமல் தன்னுடைய உணவையும் எளிதில் பிடித்துக் கொள்ளுகிறது.

கடலில் வாழும் பெரிய மீன்களும் திமிங்கிலங்களும் மீன் எண்ணெய் எடுக்கக்கூடிய காட் என்னும் மீன் வகையும் ஈர்க்கி கணவாய் மீன்களுக்குக் கடும் பகையாகும். ஈர்க்கி கணவாய் மீன்கள் எதிரிகளைப் பார்த்த மாத்திரத்தில் தம்முடைய தலையின் அடிப்பாகத்தில் உள்ள உறிஞ்சிக் குழாய் வழியாக உடலிலிருந்து கெட்டியான கறுப்பு நிற மை போன்ற ஒருவகைத் திரவத்தை வெளியேற்றுகின்றன. ஒரு குறிப்பிட்ட அளவு தூரம் வரை தண்ணீர் கருமையாய் மாறிவிடுகிறது. ஈர்க்கி கணவாய் மீன் இருந்த இடம் தெரியாது போகும். தண்ணீர் மீண்டும் தெளிவு முன்னர் ஈர்க்கி கணவாய் மீன் தப்பிவிடும். தன்னுடைய உறிஞ்சிக் குழாய் மூலம் கடல் நீரை உள்ளே இழுத்து வெகு வேகமாகத் தண்ணீரை வெளியே பீச்சும். அப்போது ஏற்படும் உந்து சக்தியால் அது முன்னோக்கி வில்லிலிருந்து விடுபட்ட அம்பு போன்று பாய்ந்து செல்லும். இதனால் ஈர்க்கி கணவாய் மீனுக்குக் ''கடல் அம்பு மீன்'' என்று மற்றொரு பெயரும் உண்டு.

ஈர்க்கி கணவாய் மீன் பசி எடுக்காத நேரங்களிலும் கூடத்தான் செல்லும் வழியில் வரும் சிறிய மீன்களையும் மற்றப் பிராணிகளையும் பிடித்துத் தன் வாயால் அப்பிராணியின் கழுத்தின் மேல்புறத்தைக் கடித்துக் கொன்றுவிடும். பின்பு உண்ணாமலேயே அவற்றை வீசி எறிந்து செல்லும். இது அதனுடைய கொடூரமான விளையாட்டு.

தென்னிந்திய கடற்கரைப் பகுதிகளில் பிடிக்கப்படுகிற ஈர்க்கி கணவாய் மீன்கள் சுமார் இரண்டு



அங்குலம் முதல் ஒன்றரை அடி நீளம் வரை காணப்படுகின்றன. ஆனால் இராட்சத உருவம் கொண்ட ஈர்க்கி கணவாய் மீன்கள் நார்வே, இங்கிலாந்து கடற்கரைகளில் காணப்படுகின்றன. இவை பெரிய படகைக்கூட இழுத்துச் சென்று தண்ணீரில் கவிழ்த்துவிடும். நியூஸிலாந்து கடலில் உள்ள ஈர்க்கி கணவாய் மீன்கள் ஐம்பது முதல் எழுபத்தைந்து அடி நீளம் வரை வளரக் கூடியவை.

— அந்தோனி ஜோசப்



"இந்தக் காலத்தும் பிள்ளைகளுக்கு ஏ. பி. ஸி. டி.க்கூட ஒழுங்கா சொல்லத் தெரியலிங்க!"

"அப்படியா?"

"ஆமாமுங்க! பஸ்ஸடியிலே ஒரு புள்ளேக் கிட்டே, என்ன தம்பி படிக்கிறேன்னு கேட்டால் பி. எஸ்ஸின்னு சொல்றது!"

"இந்த வருஷம் எதேச்சையா எல்லோரும் ஒன்று சேர்ந்திருக்கிறோம். அம்மா பிறந்த நாளைத் தடபுடல் பண்ணிவிடணும்." கோபு என்றுமே தடபுடல்காரன்தான். அம்மாவுக் கென்றும் அப்பாவுக்கென்றும் ஏதோ வாங்கிக் குவிக்கிறான். கோமுவும் குறை வைக்கவில்லை தன் பங்குக்கு. டவுனுக்குப் போய் அகலக் கரை போட்ட பட்டுப் புடவையும் ரவிக்கை யுமாக வருகிறாள்.

ராஜு கம்பெனிக்குப் பணம் கேட்டுத் தந்தி யடிக்கிறான். மறு நாளே பணம் வந்து சேருகிறது. கைக்கொண்டாக அம்மாவுக்குக் கல் வளையல் வாங்கி வந்தபோது அம்மா வின் கண்கள் கலங்குகின்றன. தன் மெலிந்த விரல்களால் அவன் கையைப் பிடித்துக் கொண்டு 'ராஜு...' என்று விம்முகிறாள்.

அம்மா தவிக்கிறாள்..."நீங்கள்ளாம் ஊருக் குப் புறப்பட்டு விட்டேள். இந்த வெறிச்சைப் பழக்கப் படுத்திக் கொள்வது இலேசன்னு நினைத்தாயா...?"

எதையுமே பழகிக் கொண்டு விட்டு நிறுத்து வது என்பது கஷ்டம்தான். அம்மாவும் அப் பாவும் எளிய வாழ்க்கையாகவே கழித்துப் பழகினவர்கள். தெளிந்த நீரோடையாக வாழ்க்கையைக் கழித்ததினால் கூழாங்கல்லை யும் குறு மணலையும்போல் அவர்களது தன்னலமற்ற அன்பையும் தெளிவாகக் கண்டு கொள்ள முடிகிறது. என்றோ அவர்கள் வந்து விட்டுப் போன ஆடம்பரமான கவடுகள் கரையாகத்தான் தெரியும் சில நாட்களில்.

ரயிலடிக்கு வந்து நெடு நேரம் அம்மா பேசிக் கொண்டிருந்தாள்.

"ஒவ்வொரு வருஷமும் நல்லபடியாக எல் லோரும் சந்திக்கக்கணும். கஷ்டம் கவலைகள் எல்லாம் கூடப் பிறந்தவைதான். ஆனால் அதையெல்லாம் மறந்துட்டு இருக்கிறோம் பாரு... அதுதான் பாலைவனத்திலே ஒரு வாய்த் தண்ணீர் கிடைச்சதுக்குச் சமம்."

ரயில் கிளம்புகிறது. — அம்மாவிடமிருந்து பிரிக்கும் குழந்தையைப் போல் அம்மாவும் அப்பாவும் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து செல் லும் சாலையில் புள்ளியாக மறையும் வரையில் பார்த்துக் கொண்டிருந்தார்கள் அவர்கள். இனி அடுத்த சந்திப்பு எப்போதோ?

அம்மா, அப்பாவைக் கூட அழைத்து வைத்துக் கொள்ள வேண்டும் என்ற வேகம் இம்மாதிரி நேரங்களில் எழுவதுண்டு. அதுவே பின்பனிப் படலமாக மறைந்து விடுவது முண்டு.

லீவு முடிந்து வேலைக்குப் போனபோது பொறுப்புகள் மலையாக நின்றன. வந்து சேர்ந்ததைப் பற்றி அம்மாவுக்கு எழுதக்கூட நேரமில்லை. ஆனால் அம்மாவிடமிருந்து அதற் குள் கடிதம் வந்துவிட்டது அவனுக்கு.

ராஜுவுக்கு,

அம்மா அநேக ஆசீர்வாதம். நீ பத்திர மாய்ப் போய்ச் சேர்ந்திருப்பாய் என்று நினைக்கிறேன். வேலைத் தொந்தரவினால் உன்னால் உடனே எழுத முடியாமல் இருக்கும் என்று நினைக்கிறேன்.

இந்தத் தடவை நீங்கள் மூன்று பேரும் இங்கு வந்து எங்களுடன் இருந்தது நாங்கள் செய்த புண்ணியம். ஆனால் அதை அதிகம் தாங்க முடியாதுன்னு என்னவோ கடவுள் உங்களை ஒவ்வோர் இடத்திலே பிரித்து வைத்திருக்கிறான்.

கோபுவை எடுத்துக்கொள். நல்ல சம் பாத்தியம். ஆனால் புருஷக் குழந்தை இல்லியேன்னு குறை. இனிமேல் தனக்குப் பிறக்காது என்று நினைக்கிறான்.

கோமுவோ, அந்தப் பெண் குழந்தை கூடத் தனக்கு இல்லையேன்னு ஏங்குகிறாள்.

உன் விஷயத்தில் வேறு மாதிரி குறை.

இந்தத் தடவை கோபுவும் கோமுவும் தனித் தனியாக என்னிடம் கேட்டார்கள், உன்னைக் கேட்க முடியாமல். ஏன் என்றால், நீயும் அவர்களும் தத்தம் குடும்பம் என்கிற பாதையிலே பிரிந்து விட்டீர்கள். வயசாகி விட்டால் தாயார் வீடு, குழந்தைகளுக்குச் சாலைகள் கூடுகிற இடம் மாதிரிதான். கோபு, உன் சின்னப்பிள்ளையைத் தன்னிடம் வைத்துக் கொள்ள வேண்டும்னு நினைக் கிறான். கோமு உன் பெண்களில் ஒருத்தியை அனுப்பச் சொல்லும்மா என்கிறாள். நான் வெறுமனேதான் உனக்குச் சொல்கிறேன். சாருகிட்டே கேட்டுக் கொண்டு நீ முடிவு பண்ணு. ஆசீர்வாதம். அம்மா."

கண்களை மூடிக் கொண்டு பின்னால் சாய் கிறான். அம்மாவின் கடிதத்தை, திரைப்படங் களில் காட்டுவது போல் அவளே படிப்பது மாதிரி தோன்றுகிறது.... அம்மா பிள்ளைகளை யும் பெண்ணையும் பிரிந்திருக்கப் பழகிக் கொள்ளவில்லையா... இன்றுகூடத் தன் மக்க ளின் பிரச்னைகளை ஒதுங்கி நின்றே அவள் பார்க்கிறாள்.

ராஜு, சாருவுக்கும் கோபுவுக்கும் கோமு வுக்கும் தனித் தனியே கடிதம் எழுத உட்காருகிறான்.


LIFEBUOY
for health
லைப்பாய்
இருக்குமிடம்: அதுவே
ஆரோக்கியம்
இருக்குமிடம்
நீராடும் இன்பம் தருவதிலே நிகரில்லாத சோப் லைப்பாய். குதூகல உணர்ச்சியின் குற்றாலம். ஆரோக்கிய மலர்ச்சியின் ஆலோலம். நல்ல சோப்புக்குரிய நன்மைகள் யாவும் பெறுவீர், மேலும் பெறுவீர் லைப்பாய் துணையால்...
அழுக்கிலுள்ள கிருமிகளைக்
கழுவிக் களைவது
லைப்பாய்

# அன்பின் வடிவம்

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

உச்சி வெய்யில். ரிக்ஷாவை விட்டுக் கீழே இறங்கி, கை நிறையச் சாமான்களின் பொட்டலங்களோடு வீட்டுக்குள் நுழைந்தாள் சாந்தா. தெருவிலிருந்து உள் வரை நடத்திச் சென்ற, மாவில் இழைத்த அடிச் சுவடுகள், இன்னும் மறையவில்லை. பண்டிகை நாளில் எழுதிய கோலம். ஞாபகங்களின் கனத்தோடு அவைகளில் அடியொற்றியபடி உள்ளே நடந்து வந்தாள்.

வாலைக் குழைத்துக் கொண்டு, பஞ்சுத் தலையணை எனக் காலைச் சுற்றிச் சுற்றி வந்து கட்டிக் கொண்டது ஜிம்மி. அதற்குத் தெரியும், எஜமானியம்மாள் பிஸ்கோத்து வாங்கி வந்திருப்பாள் என்று. அதன் முதுகை அன்பாக நீவிக் கொடுத்து விட்டு, அப்படியே கைப் பொட்டலங்களுடன் உட்கார்ந்து கொண்டாள். அவள் மடியின் மீது அது குழைந்து விளையாடி விட்டுச் சுற்றிச் சுற்றி வந்தது ஜிம்மி.

''மேரி!''

அவளுடைய குரல் கொல்லை வரை, நிதானமாய் முழு ஒலியுடன் பிரிந்து, கருண்டு அடங்கிற்று. பின்கட்டில் தலை நீட்டும் முக அடையாளம் ஏதும் இல்லை. வரவில்லையா என்ன?

''இன்றைக்கு வர முடியாது என்று தன் பெண்ணிடம் சொல்லி அனுப்பி விட்டாள் மேரி. அவளுக்கு உடம்பு சரியில்லையாம்.''

பின்புறம் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்த ஜயலட்சுமி அங்கிருந்தே குரல் கொடுத்தாள். அந்தச் செய்தி காதில் விழுந்ததும், சட்டென்று வீட்டு வேலைகள் அனைத்தும் பன்மடங்கு பெருகி, அவள் காட்சியில் கனத்து இறங்கின. ஒவ்வோர் அறையாகப் பெருக்க வேண்டிய வீடு; குழாயடியில் சுமையாக விழுந்திருந்த துணி மூட்டை. அடுப்பின் கரியும், சமையலின் பசையும் மாறாமல் முற்றம் நிறைய அடுக்கி இருந்த பாத்திரங்கள்!

அவளுக்குத் தெரியும். மேரிக்கு உடம்பு ஏதுவும் இல்லை. எங்கேயாவது திருவிழாக் கூட்டத்தோடு போயிருப்பாள். அல்லது அவள் வீட்டுக்கு விருந்தினர் வந்திருப்பார்கள். நடுநடுவில் வாரத்துக்கு ஒரு நாள் இப்படித் தான் அவள் நின்று விடுவாள். அவளைக் கண்டிக்கவும் துணிவில்லை. வேறு ஆளைத் தேடிக் கொள்ளவும் மனமில்லை.

சாமான்களை மூலையாகப் பதுக்கிவிட்டு எழுந்து பின்புறம் போனாள். வெய்யிலுக்கு, குழாயடியில் காலில் விட்டுக் கொண்ட நீரும், பாலைவி



விருந்து குடித்த தண்ணீரும் எவ்வளவோ இதமாக இருந்தன. தண்ணீர் பட்டதும் கண்ணிமைகள் வதங்கிய இலையில் நீர் தெளித்தது போலச் சுருக்கம் நீங்கின. பாட்டிலிலிருந்து மேலும் இரண்டு விழுங்குகள் தண்ணீர் குடித்தாள்.

சுவரில் முதுகு சாயச் சரிந்து உட்கார்ந்து கொண்டாள். காற்றில் உடல் வெப்பம் சற்று அடங்கிக் குளிர்ந்தது போலத் தோன்றியது. கண்களை மூடிக் கொண்டாள்.

''அம்மா. அம்மா. இந்தக் கணக்கைச் சொல்லிக் கொடு.''

ராஜி மடியின் மீது வந்து விழுந்தது எரிச்சலைத்தான் மூட்டிற்று. ஜயம் வயது வந்த பெண். அவளுக்குப் பரீட்சை முடிந்தாயிற்று. குழந்தைக்குச் சொல்லிக் கொடுக்கலாம். ஆனால் அவள் செய்ய மாட்டாள். எல்லாம் பிடிக்கத் தெரியும். இல்லையென்றால் துணியில் சாயத்தைக் குழைத்துப் பூவேலை செய்யத்தான் பொழுது சரியாக இருக்கும்.

ஏன் அவளுக்குத்தான் பொழுது இல்லை? தனக்கு இருந்ததா? காலையிலிருந்து கடிகாரத்தின் பெரிய முள் தன்னை ஓயாமல் விரட்டிக் கொண்டுதான் இருக்கிறது. விடிந்து இருள் பிரிந்த நேரம் முதல், வீட்டுக்குக் கடைசியாக விளக்கை அணைத்துக் கண்ணை மூடும் வரை, எந்தச் சமயத்திலும் அவளுக்கு நேரம் மிகுந்து நின்றதே இல்லை. கல்லூரியில் படித்த போது, நேரத்தைக் கழிக்கப் பொழுது போக்குகளை நாடிப் போன ஞாபகம் வந்தது.

ராஜி சிலேட்டில் மனம் அழுந்தாது ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தாள். அவளைப் போலவே. இன்னும் பாடத்தின் ருசி பிடிக்கவில்லை அவளுக்கு. மணி எதிரே கண்ணாடியில் பார்த்துக் கொண்டே விரல் நகத்தால் வகிடைக் கீறிக் கொண்டிருந்தான். ஆயிற்று; இன்னும் அரை மணி நேரத்தில் அவன் மட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பிவிடுவான். பொன்னுருகும் வெய்யிலில்தான் அவர்கள் விளையாட்டு மும்முரமாக இருக்கும்.

''என் நீல நிறச் சராயை இன்னும் தைக்கவில்லையே அம்மா நீ?''

அவள் விழிகள் அவன் புறமாகத் திரும்பிக் குற்றம் சாட்டின. அவள் செய்து வைத்திருக்கமாட்டாள் என்ற தீர்மானத்தில் அவன் குரல் மேலே தொடராமல் தயக்கத்தில் தாழ்ந்தது.

''நாளைக்குத் தைத்து வைத்து விடுகிறேனடா! இன்றைக்கு அந்தக் காக்கி சராயையே கொஞ்சம் போட்டுக் கொண்டு போய் விடு.'' மணி கீழே உட்கார்ந்து பிரஷினால் தன் பூட்ஸைத் தேய்க்க ஆரம்பித்து விட்டான். கோபத்துடன் அது பூட்ஸின் முதுகில் இறங்குகையில் 'கிரீச் கிரீச்' என்றது.

''உனக்கு 'ஜாம்' வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். கொஞ்சம் இரு. ரொட்டியைத் துண்டு செய்து வதக்கிக் கொடுக்கிறேன்.''

''எனக்கு ஒன்றும் வேண்டாம்.''

மணி பூட்ஸைக் கையில் தூக்கிக் கொண்டே வாசற்புறம் போனான். ராஜி அவள் கழுத்தை அணைத்துத் தன்புறமாக இழுத்தாள்.

''அம்மா எனக்கு?''

''ஆகட்டும். உனக்கும்தான்'' என்று சொல்லிக் கொண்டே சாந்தா தன்னை விடுவித்துக் கொண்டாள். ராஜியின் பாடம் இன்னும் தொடங்கவில்லை. வீட்டுக் காரியங்கள் ஆரம்பிக்கவில்லை. மணியின் நீலச் சராய்த் துணியைத் தேடி எடுத்துக் கொண்டு, தையல் மிஷினை நாடிப் போனாள்.

எல்லாருக்கும் ஒரு நினைப்பு: அவளுக்கு மட்டும்தான் நிறைய ஒழிவு இருந்தது என்று. கணவனும் சரி, குழந்தைகளும் சரி, வேலையை அவளுக்கென்று கையில் கொடுக்கத்தான் காத்துக் கொண்டிருந்தார்கள். ''அம்மா தான் செய்து கொள்ளட்டுமே?'' என்ற நினைப்புத்தான் வேலைக்காரிக்குக்கூட.

குழந்தைகள் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு விளையாடப் போய் விட்டார்கள். ஜயம் அடுத்தவீட்டுப் பெண்ணுடன் பொழுது போக்காகப் பேசக் கிளம்பி விட்டாள். மாலை இருள் பந்து பந்தாகத் திரள ஆரம்பித்து விட்டது. பூசை மாடத்துக் குத்துவிளக்கின் சுடர் ஒளி அவளைக் கவ்விற்று. மற்ற விளக்குகளை ஏற்ற எழுந்திருக்கக்கூடச் சாந்தாவுக்கு அப்போது மனம் இல்லை.

ஸ்கூட்டர் வந்து காறி ஒலி எழுப்பி அடங்கியதும், கணவன் உள்ளே வந்து, வாசலில் இரண்டு கைகளையும் அடைத்தாற் போல் வைத்துக் கொண்டு நின்றதும்கூட அவள் கவனத்தைத் தொடவில்லை. மெதுவாக அவன் கூப்பிட்டதும் காதில் விழவில்லை. அருகே வந்து அவள் முகத்தெதிரே அவன் விரலைச் சுண்டினான். அவள் 'திடுக்'கென்று விழித்துக் கொண்டாள்.

''என்ன இவ்வளவு கனமான யோசனை? பொழுது நிறைய இருக்கிறாற் போல் இருக்கிறது. மனத்துக்குள்ளே கோட்டைகள் கட்ட..!'' புன்னகை புரிந்தவாறு அவன் முதுகைத் தட்டினான். அவள் எழுந்து உள்ளே போனாள், அவனுக்குச் சிற்றுண்டி எடுத்துவர.

''பொழுது நிறைய இருக்கிறாற்போல் இருக்கிறது.'' அந்தக் குரலும் சிரிப்பும் இன்னும் காதில் ஒலித்தன. சமையல் அறை ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள். தென்னை மட்டை ஓலைகளின் சலசலப்பு, காற்றில் மிதந்து வருகையில், வானம் பெருமூச்சு விட்டது போலிருந்தது.

கல்லூரியில் அவள் படித்தபோது சந்திரன் ஆராய்ச்சிப் படிப்பு படித்துக் கொண்டிருந்தான். சோதனைச் சாலையில், அவளுக்குத் துணையாக அவன் அளவுகள் எடுத்து, கணக்குகள் போட்டு, படங்கள் வரைந்தது மட்டுமல்ல. விளையாட்டிலும் இருவரும் சேர்ந்து ஆடுவார்கள். அவர்கள் இருவருமாக ஆடிய 'மிக்ஸெட் டபிள்ஸ்' பூப்பந்து ஆட்டத்தில் பல முறைகள் கோப்பைகள்கூடக் கிடைத்திருக்கின்றன. அவர்கள் முதலில் இணையத் தொடங்கியது விளையாட்டில்தான். படிப்பிலும் சரி, அவளுடைய சுறுசுறுப்பையும், திறமையையும் கண்டு சந்திரன் பல முறை வியந்ததுண்டு. வாழ்க்கையில்

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது!

சிறியோர், பெரியோர், யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"பல் நோய்களால் நான் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். உங்களுடைய போர்ஹான்ஸை உபயோகித்துப் பார்த்தேன்.......இப்போது எனக்கு அந்த நோய்களின் அவதியில்லை. அநேகமாக 20 முதல் 25 நபர்கள் போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கி விட்டனர். என் குடும்பத்தில் போர்ஹான்ஸ் தனி இடம் பெற்று விட்டது."

—உதயசங்கர் திவாரி, பாட்னா.

"விஞ்ஞான முறையில் தயாரிக்கப்படும் உங்கள் போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த பத்து வருடங்களாக உபயோகித்து வருகிறேன். அது எனது ஈறுக் கோளாறுகளையெல்லாம் அகற்றி விட்டது. இப்போது என் குடும்பத்தினர் யாவருமே போர்ஹான்ஸ் பற்பசை கொண்டு பல் துலக்குகிறார்கள்."

—எஸ். எம். லால், புது டில்லி.

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும் காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷ்ஷையும் உபயோகியுங்கள்...உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!



இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம்.

தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 16 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள் : மானேர்ஸ் டென்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1. K-6

பெயர் ____________ வயது ________

விலாசம் ____________________

மொழி ____________________

**போர்ஹான்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

ASF. 182 TM.

CIBA Cosmetics



# ஒரே ஒரு டூத்பிரஷ் அணிவரிசை உமக்கென்று ஒன்று

உங்களின் பற்களுக்கு...
உங்களின் ஈறுகளுக்கு...
உங்களின் விருப்பத்துக்கு...
உங்களின் வயதுக்கு...

பினகா வரிசை—
எல்லா வயதினருக்கும்
ஏற்ற விருப்பத்துக்கும்



பினகாவின் மழுக்கப்பட்ட முனைகள், ஈறுகளுக்கு
ஊறு செய்யாதவை



## டூத்பிரஷ்

## வெறும் டூத்பிரஷ் மட்டும் அன்று—அது பினகா எனில் நன்று!

**Binaca®**

ULKA : CT3-66 TAM

அவர்கள் ஜோடியாக அமைவதற்குக் காரணமாக இருந்தது அந்த வியப்புத்தான்.

வாழ்க்கையில் அப்புறம் எவ்வளவோ நிகழ்ச்சிகள். எண்ணங்களின் ரசாயனம். குடும்பத்தின் அளவான, அளவு மீறிய சோதனைகள். ஒருவருக்கொருவர் தோள் கொடுத்துச் சமாதானம் செய்து கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்கள். வாழ்க்கை பூப்பந்தாட்டமாக இல்லை. அவளுடைய வாகவும், சுறுசுறுப்பும் அந்த மேடைக்குப் போதுமானதாக இருந்து வெற்றி கிடைத்திருக்கலாம். இங்கே அது போதவில்லைதான்.

சந்திரன் மடியின் மீது பத்திரிகையைப் பிரித்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். வழுவழுப்பான காகிதங்களில் விளையாட்டுப் புகைப்படங்கள் வெளியாகியிருந்தன. தலையில் அலங்கார ரிப்பன் கட்டும், வெண்ணிற உடுப்புமாக, பூப்பந்தாடும் ஒரு பெண்ணின் படம்.

''என்னுடைய சாந்தாகூட ஒரு காலத்தில் பூப்பந்தாடுவது வழக்கமோ ?''

சாந்தாவின் உதட்டிலிருந்து ஒரு சிறு சிரிப்பு தெறித்தது.

''ஏன் சொல்லக் கூடாதா ?''

''எதைச் சொல்லி இப்போது என்ன ஆக வேண்டும் ?'' புத்தகத்தை எடுத்துப் பிரித்துக் கொண்டே, நாற்காலியின் கைக் கட்டையில் உட்கார்ந்தான். பாலைக் கண்டுவது போல் அந்தச் சிரிப்பு. உணர்ச்சிகள் நெகிழ்ந்து படிந்து அமர்ந்து விட்டது போன்ற அந்த நிதானம்.

''இங்கே உனக்கு ஒரு வேலைக் கிளப்— வேறு பொழுதுபோக்கு எதுவும் இல்லையா சாந்தா ?''

''போக்குவதற்கு மிச்சமாக எனக்கு ஏது பொழுது ? நான் அப்படியெல்லாம் இருந்து வெகுநாட்கள் ஆயிற்று.'' — விளையாட்டிலிருந்து ஏமாந்து ஒதுங்கிய, ''எனக்கு ஒன்றும்




இங்கிலாந்தில் உள்ள எடின்பரோவில் அரச மருத்துவ மனையில் புகழ் பெற்ற சர்ஜனாக வேலை பார்த்தவர் டாக்டர் ஜோசப் பெல்.

ஒரு நாள் நோயாளி ஒருவர் பெல்லின் அறைக்குள் வந்தார். அவரையே கூர்ந்து நோக்கிய பெல் ''நீங்கள் இடது கையால் செருப்புத் தைக்கும் தொழிலாளிதானே?'' என்று கேட்டதும் திகைத்துவிட்டார் அந்தச் சக்கிலியர். வியப்புடன் தம் அருகில் குழுமியிருந்தவர்களை நோக்கி ''இது ஒன்றும் அவ்வளவு கஷ்டம் இல்லை. இவரது கால்சராயை நோக்குங்கள். முட்டிகள் இருக்குமிடத்தில் எவ்வளவு நைந்து போயிருக்கிறது. இடது பக்கத்தை விட வலது பக்கம் வெகுவாக நைந்திருக்கிறது. எனவே அவர் தம் இடது கையால்தான் எந்தப் பொருளையும் உபயோகித்திருக்க முடியும். அவர் அருகில் அடிக்கும் தோல் வாசனையைக் கவனியுங்கள். இவர் ஓர் இடது கைப் பிரயோகமுள்ள சக்கிலியர் என்று கண்டுபிடிப்பது கஷ்டமா?'' என்றார் பெல்.

ஒரு சமயம் பெல் வகுப்பு நடத்திக்கொண்டிருந்தார். ஒரு கண்ணாடிக் குடுவையில் நாற்றமடிக்கும் திரவம் ஒன்றிருந்தது. அதைப் பற்றித்தான் அன்று பாடமும்.

''மாணவர்களே, நீங்கள் இதுபோன்ற எந்த ஒரு பொருளை ஆராய்ந்தாலும் மூன்று முக்கிய குணங்கள் உங்கள் கவனத்தை ஈர்க்கும். அப்பொருளின் நிறம், வாசனை, ருசி இவற்றைப் பற்றி அறிந்தால்தான் விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்ய முடியும்'' என்று கூறிவிட்டு பெல் தம்முடைய விரல் ஒன்றை திராவகத்தில் விட்டு விரலை வாயிலும் வைத்துக்கொண்டார்.

பின்பு ''எங்கே நீங்கள் ஒவ்வொருவராக நான் செய்த மாதிரி செய்யுங்கள். உங்களுக்கு என்ன தோன்றுகிறது என்று அறிய விரும்புகிறேன்'' என்றார்.

மாணவர்கள் சிலர் திரவத்தில் விரலை விட்டு வாயில் வைத்தபோது அருவருப்புடன் கூடிய வாசனை தாங்காமல் அவதிப்பட்டனர்.

மாணவர்களிடம் ஒரு சுற்றுப் போய்விட்டுக் குடுவை பெல்லிடம் திரும்பியது.

''என் அருமை மாணவர்களே! உங்களில் ஒருவருக்காவது ஆழ்ந்து அறியும் பக்குவம் இல்லை. நான் என் ஆள்காட்டி விரலைத்தான் குடுவையினுள் விட்டேன். ஆனால் எனது நடு விரலைத்தான் வாயில் வைத்தேன். இதை நீங்கள் ஒருவர்கூடக் கவனிக்கவில்லையே!'' என்றார் அந்தப் பொல்லாத டாக்டர்.

இந்த டாக்டரிடம் 'கிளார்க்'காக இருந்து பின்பு டாக்டராகத் தொழில் நடத்தியவர்தான் ஆர்தர் கானன் டாயில். டாக்டர் ஜோசப் பெல்தான் கானன் டாயிலின் உள்ளத்தில், ஷெர்லாக் ஹோம்ஸாக உருவெடுத்தார். தமது கதைகளை இறுதியாக எழுதும் முன்பு பெல்லுடன் அவற்றைப் பற்றி விவாதிப்பார் கானன் டாயில்.

- என். ராதாமணி

ஆதாரம்: இந்தியா [illegible]

வேண்டாம்'' என்று நெஞ்சு கமறச் சொல்லும், குழந்தையின் குரல் அவள் பேச்சில் ஒலித்தது.

''ஓ'' என்று அவள் கைகளை எடுத்துக் கொண்டான் சந்திரன். ''உனக்கு வேலையின் சலிப்புத்தான். ஏன் நீ நாளைக்கு நிதானமாக எழுந்திருக்கக் கூடாது? நானும் ஜயமும் காப்பி போட்டு, சமையலைக் கவனித்துக் கொள்கிறோம்.''

''அப்படியா? நாளைக்குக் காலையில் 'லேட்'டாக எழுந்திருந்தால், எனக்கு எல்லாத் தெம்பும் வந்து விடும் என்கிறீர்கள் ?''

சந்திரன் நிமிர்ந்து பார்த்தான். அவள் முகத்தைப் பார்த்ததும் அவன் கண்ணிலும் அந்த ஏமாற்றம் நிழல் தட்டிற்று. எத்தனையோ பார்த்துப் பழகிய அந்தக் கேலி அவள் கண்ணில் பளபளத்துக் கொண்டு நின்றது. அவன் பேச்சை அவள் அலட்சியம் என்று கருதினாளா ? கோபக் கண்ணீர் ததும்பிய அந்தக் குரல் ?

அன்று விடுமுறை நாள்.

சந்திரனுக்கும் ஒரு வியப்பாக இருக்கட்டும் என்று பத்திரிகையில் வெளிவந்திருந்த புதுமையான சிற்றுண்டி ஒன்றைத் தயார் செய்திருந்தாள். அவள் தந்தையிடம், கல்லூரி விடுமுறை நாட்களில் அவள் இதைப் போல், புதிர் போடும் விதமாக ஏதாவது சிற்றுண்டி தயார் செய்வதுண்டு. தெரிந்தாலும், வேண்டுமென்றே, அவர் முகத்தில் திகைப்பை வரவழைத்துக் கொண்டு கேட்பார். அவள் பதில் சொன்னதும் கண்கள் குறும்பில் மின்ன, இமைகளைச் சிமிட்டி மூக்கில் விரலை வைத்துக் கொண்டு சிரிப்பார். அவளும் கையைக் கொட்டிச் சிரித்துவிட்டு உள்ளே ஓடி விடுவாள்.

அம்மாவிடம், ''சாந்தாவின் சாமர்த்தியத்துக்கும் கலகலப்புக்கும் தகுந்த ஒரு கணவன் அவளுக்குக் கிடைக்க வேண்டும்'' என்று பெருமையும் கனிவும் புதுப் பிரவாகமாய்த் தொனிக்க அவள் தந்தை சொல்லும் அந்தப் பேச்சில் தனி உற்சாகம் ததும்பும். அவளுடைய சாமர்த்தியத்தில், குண அழகுகளில், அவருக்கு எவ்வளவு நம்பிக்கை ?

அந்தப் பண்புகள் இப்போது எங்கே போய் விட்டன? அவள் ஏன் கூட்டு நத்தையாக ஒடுங்கி விட்டாள்? கணவனுக்கும் குழந்தைகளுக்கும் கொடுத்த உழைப்பில், தன் இயல்பான மெருகை ஏன் அப்படி இழந்து விட்டாள் ? அந்தச் சாந்தாதான் இவள் என்று இப்போது சொன்னால் அவள் அண்டை வீட்டுக்காரர்கள் நம்புவார்களா? அவளுடைய குழந்தைகளே உணர்ந்துகொண்டனவா அவளுடைய மதிப்பை ?

ராஜி சில சமயம் கையில் இருக்கும் தம்ளரைத் தூக்கிக் கோபத்துடன் எறிந்து விட்டுச் சொல்வதுண்டு. ''எனக்கு இங்கே இருக்கவே பிடிக்கலே. என்னை யாரும் புரிஞ்சுக்கலே இந்த வீட்டிலே'' என்று. சில சமயம் அவள் மனத்துள்ளும் அப்படித்தான் ஒரு குழந்தைக் குரல் பிடிவாதமாகக் கேட்டது. அதை அவள் மறுக்க மறுக்க அது விம்பாய் வளர்ந்து உயர்ந்து கொண்டே வந்தது.

கூடம் விளையாட்டுச் சாமான்களுக்கும் குழந்தைகளுக்கும் நடுவே புதுக் கலகலப்பாய் இருந்தது. விளையாட்டில் குழந்தைகளின் பேச்சும் கேள்விகளும் வாய்க்கு வாய் பந்தாடியவண்ணம் இருந்தன. சிறு தட்டுகளில் சிற்றுண்டியை வைத்துக் குழந்தைகளுக்கும், பக்கத்து வீட்டிலிருந்து விளையாட வந்திருந்த குழந்தைகளுக்கும் கொடுத்தாள் சாந்தா.

''உங்களுக்கு?'' என்று மூலையில் நாற்காலியில் உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருந்த சந்திரனின்புறம் திரும்பினாள்.

''நீயும் நானும் அப்புறம் சாப்பிடலாம்'' என்றான் சந்திரன் குறும்பாக. ஜயமும் மணியும் அதை ரசித்துப் பாராட்டுவது போலக் கையைத் தட்டினார்கள். ''உட்காரும்மா. நீயும் உட்கார். அப்புறம் வேலைக்குப் போகலாம். எங்களோடு நீயும் ஐந்து நிமிஷங்கள் விளையாட்டில் சேர்ந்து கொள்.'' ஜயத்தின் குரல் கெஞ்சிற்று. நாலைந்து குழந்தைக் குரல்கள் கூடவே ஒத்துப் பாடின.

சேலைத் தலைப்பில் ஈரக் கையைத் துடைத்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டாள். அது ஒரு விளையாட்டு. ஒவ்வொருவரும் தன்னை ஒரு குறிப்பிட்டவராகக் கருதிக் கொள்ள வேண்டும். ஒவ்வொருவரிடமும் சொல்லும் பதிலிலிருந்து அவர் தன்னை யாராகக் கருதிக் கற்பனை செய்து கொண்டாரோ, அதைக் கண்டுபிடித்துச் சொல்ல வேண்டும். அதுதான் விளையாட்டு.

ஜயம், மணி, பக்கத்து வீட்டு சிவகுமார், சிவகாமி எல்லாருடைய பங்கும் ஆயிற்று. அவளுடைய பங்கும் வந்தது. சாந்தா கண்ணை மூடிக் கொண்டாள். மணி கேட்டான்.

''ஆணா பெண்ணா ?''

''பெண்.''

''எல்லோருக்கும் பிடித்தவரா?''

''சில பேருக்குப் பிடிக்கும்.''

''இவர் வயதானவரா? அழகானவரா ?''

''கொஞ்சம். ஆனால் எல்லாரும் அவரை விரட்டுவதில் வயசு அதிகமாக ஆனது போலத்தான் இருக்கிறது. அவ்வளவு அழகு என்று சொல்ல முடியாது.''

''அவருக்கு என்ன தெரியும்?''

''நன்றாகப் பாடத் தெரியும்.''

ஜயம் சட்டென்று புகழ் பெற்ற ஒரு பாடகியின் பெயரைச் சொன்னாள்.

''இல்லே. தப்பு —'' சாந்தா சிரித்துக் கொண்டே தொடர்ந்து சொன்னாள். ''அவருக்கு அவருடைய அப்பாவின் பாராட்டுதல் நிறைய உண்டு. கூடவே அவருடன் நிறைய பேர்கள் சுற்றி யிருக்கிறார்.''

''ஓ. எனக்குத் தெரியும். இந்திராகாந்தி.''

''இல்லே! இல்லே! அவருக்குப் பூப்பந்தாட்டம் நன்றாக வரும். பரிசுகள்கூட வாங்கி இருக்கிறார் !''

''நான் சொல்கிறேன். மிஸ் ஷோபா மூர்த்தி. பாட்மிண்டன் சாம்பியன். அப்படித்தானே ?''

''இல்லே !'' என்றாள் சாந்தா சிரித்துக் கொண்டே. ''இன்னோர் அடையாளம் ! அவருக்குக் கதைகள் எழுதத் தெரியும். கல்லூரியில் நாடகம்கூட எழுதுவதுண்டு.

# மக்களின் தேர்வு

## லிப்டன்




## ஹிமாலயன் கோல்டன்-டஸ்ட்

லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் சாதாரண டீ அல்ல!

எல்லோருக்கும் உகந்த எல்லாச் சிறப்புகளும் இணைந்தது. இயற்கையிலேயே எல்லோரும் விரும்பி ஏற்பது இது!

கெட்டியான பானம்; நிறைந்த செறிவு; சிறந்த மணம். இவை மட்டுமல்ல—ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. பருகுவதில் ஓர் இன்பம்; பிறருக்குத் தருவதிலும் ஓர் இன்பம்!

மக்களின் தேர்வு—அதுவே லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ.



**லிப்டன் என்றாலே நல்ல டீ**

LHGC-9 TAM

## பெற்றோர்களுக்கு நற்செய்தி!

# பள்ளிச் சீருடைகளுக்கு பின்னி துணிகள்

## இப்பொழுது ஏராளமாகக் கிடைக்கின்றன

ஒரு மீட்டருக்கான சில்லரை
விலை (எக்ஸைஸ் வரி உட்பட)*

**சாதா டிரில்கள் :**

| | |
|---|---|
| WB17 (வெள்ளை) | ரூ. 3.46 |
| B17 C800 (காக்கி) | ரூ. 3.58 |
| WB37 (வெள்ளை) | ரூ. 3.33 |
| B37 C800 (காக்கி) | ரூ. 3.53 |

**ஸான்ஃபரைஸ்டு & மெர்ஸிரைஸ்டு டிரில்கள் :**

| | |
|---|---|
| WB94X (வெள்ளை) | ரூ. 3.85 |
| B94 C800X (காக்கி) | ரூ. 3.98 |
| WB39X (வெள்ளை) | ரூ. 3.73 |
| B39 C800X (காக் ) | ரூ. 3.92 |

**ஸான்ஃபரைஸ்டு & மெர்ஸிரைஸ்டு டிரில்கள்-நேவி ப்ளூ நிறம் :**

| | |
|---|---|
| B39BC 154X (நேவி ப்ளூ) | ரூ. 4.08 |
| D316 (வெள்ளை) | ரூ. 3.10 |
| D316 (வெளிரின, நடுத்தரமான வண்ணங்கள்) | ரூ. 3.53 |
| D316 (அழுத்தமான, மிக அழுத்தமான வண்ணங்கள்) | ரூ. 3.77 |

**கரோலின் :**

'ஸான்ஃபரைஸ்டு' & மெர்ஸிரைஸ்டு பாப்ளின்

| | |
|---|---|
| வெள்ளை | ரூ. 4.15 |
| வண்ணங்கள் | ரூ. 4.27 |

* இந்த விலைகள் தமிழ்நாடு, ஆந்திர, மைசூர், கேரள மாநிலங்களில் மட்டுமே.

சிறுவர்களின் நிஜார்களுக்கு பின்னியின் டிரில்கள், சிறுமிகளின் சீருடைகளுக்கு பின்னியின் D316, சிறுவர், சிறுமிகளின் சட்டைகளுக்கு பின்னியின் 'கரோலின்' பாப்ளின் இவற்றிலிருந்து தேர்ந்தெடுங்கள்.

பள்ளிச் சீருடைகளுக்கு பள்ளிக்கூட நிர்வாகிகள் சிபாரிசு செய்வதும் பெற்றோர் விரும்புவதும் பின்னித் துணிகளே.

பின்னி துணிகள் பல சலவைகளுக்குப் பின்னும் சீரான தோற்றமுடன், சிறப்புமிகு வனப்புடன் விளங்குகின்றன.

பின்னி டிரில்கள், D316, 'கரோலின்' பாப்ளின் ஷர்ட்டிங் முதலியவை அங்கீகாரம் பெற்ற பின்னி வியாபாரிகளிடம் கிடைக்கின்றன.

**பள்ளி நிர்வாகிகளுக்கு ஓர் வேண்டுகோள் :**

உங்கள் தேவைகளைப் பெறுவதில் உங்களுக்கு ஏதாவது சிரமம் இருந்தால் தயவு செய்து எங்களுக்கு எழுதுங்கள்.

**பின்னி லிமிடெட்**
(பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்ஸ்), கர்னாடிக் ஹவுஸ்,
தபால் பெட்டி எண் : 958, சென்னை-12.

# பின்னி

*பெற்றோரின் பணத்திற்கு பெருமதிப்பளிப்பது*

BY-5986

அதைப் பல பேர் நடித்துக் காட்டியும் இருக்கிறார்கள்.''

''ஓ. சாந்தா ராமராவ் — இந்தியாவுக்கு ஒரு வழித் துணை என்ற பிரபல நாடகம் எழுதிய பெண்மணி.......''

''தப்பு'' என்றாள் சாந்தா மறுபடியும்.

மணி முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு பேசத் தொடங்கினான்: ''நான் மறுபடியும் சொல்லிப் பார்க்கிறேன். நடு வயது ஆனவர். தந்தைக்குப் பிரியமானவர். நன்றாக விளையாடுவார். நன்றாக எழுதுவார். நன்றாகப் பாடுவார். எல்லோரும் அவருக்குத் தொந்தரவுதான் கொடுக்கிறார்கள். யார் இது? அவரை எங்கள் எல்லோருக்கும் தெரியுமா?''

''தெரிந்திருக்கலாம். புரிந்து கொள்ளவில்லை.''

''அம்மா, ஆட்டம் தப்பு. இந்த விளையாட்டில், அப்படி நினைத்துக் கொண்டிருந்த நபர், எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்தவராகத்தான் இருக்க வேண்டும். ஏன்? புகழ் பெற்றவராகக் கூட இருக்க வேண்டும்'' என்று குமுறினான் ஜயம்.

''இன்னும் ஒன்று சொல்கிறேன். அவருக்கு நாய்க் குட்டியின் மீது நிறைய அன்பு உண்டு'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாள் சாந்தா.

குழந்தை ராஜியின் கண்களில் ஒருகணம் கேள்விக் குறி தொங்கிற்று. மறு நிமிஷம் எழுந்து வாசற்புறம் ஓடினாள். நாய்க் குட்டியை மடி நிறைய அள்ளிக் கொண்டு, நடக்க முடியாமல் நடந்து உள்ளே வந்தாள்.

'' எங்களுக்குத் தெரியவில்லை, நீயே சொல்லு!'' என்று மற்ற எல்லாக் குழந்தைகளும் சேர்ந்து ஒரே குரலில் கூச்சலிட்டன.

ராஜி அவள் மடியில் நாய்க் குட்டியைத் 'தொப்'பென்று போட்டாள். ''எனக்குத் தெரியும். அது அம்மாவேதான்'' என்று சொல்லிக் கையைக் கொட்டிச் சிரித்தாள்.

''கரெக்ட்'' என்றான் தூரத்திலிருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சந்திரன். கொஞ்ச நேரம் வியப்பில் குழந்தைகள் யாரிடமிருந்தும் பேச்சே இல்லை. பிறகு வெடித்து உதறும் மத்தாப்பூ மழை எனச் சிரிப்பு நாற்புறமும் சிதறிற்று. ஆளுக்கு ஒருபுறமாக ஓடி வந்து அவள் முதுகில், 'ஷொட்டு' கொடுத்தார்கள்.

இரவு நேரம்.

விளக்கை அணைத்து விட்டு, ஜன்னல் ஓரம் உட்கார்ந்து நிலவில் குளித்து நின்ற தோட்டத்துச் செடிகளையே பார்த்தபடி இருந்தாள் சாந்தா. கிரணக் கற்றையாக ஒளி அவள் நிழல் வடிவத்தைக் கோடிட்டுக் காட்டிற்று. தன் வேலைகள் முடிந்து, அறையுள் நுழைந்த சந்திரன், விளக்கைப் போடுவதற்காகக் கதவோரத்தில் இருந்த பொத்தானை அழுத்த எண்ணிவிட்டு, விரல் அழுத்தாமல் அப்படியே நின்றான்.

''விளக்கைப் போடாதீர்கள். இதுவே எனக்குப் பிடித்திருக்கிறது.''

அவள் குரலில் ஒரு புதுக் கவர்ச்சி விழித்திருந்தது. சந்திரன் அவள் அருகே போய் உட்கார்ந்து கொண்டான். பின்புறமாக அவள் இடையைத் தன் கைகளால் பின்னிக் கொண்டான்.

''உன்னை அடையாளம் காட்டிக் கொள்ளாமல் இருட்டிலேயே இருக்கத்தான் ஆசையா உனக்கு? இங்கேயும் அந்த விளையாட்டுத்தான் உனக்குப் பிடித்திருக்கிறதா?''

அவள் ஒருகணம் மௌனமானாள். பிறகு மெதுவாய் ஒரு ''ஊம்'' வந்தது: முகம் அவன் தோள் மீது படிந்த போது.

''உண்மையைச் சொல்லுங்கள். உங்களுக்குத் தெரியுமா இல்லையா, விளையாட்டு ஆரம்பித்த போதே?''

''என் சாந்துவை எனக்குத் தெரியாதா?''

''பின்னே ஏன் அவர்களுக்கு—என் குழந்தைகளுக்கே என்னை — ஏன் புரியவில்லை?''

''அவர்களுக்கு உன்னைப் புரிந்துகொள்ளும்படி நீ உன்னையே புரிந்து கொள்ளவில்லை. அதுதான் உண்மை சாந்தா. 'அவ்வளவு அழகு இல்லை' என்று சொல்லிக் கொண்டாய். ஆனால் ஜயம் உன் அழகை என்றும் குறைவாக மதிப்பிட்டதில்லை. சிறிது சிறிதாக அவளுக்கே பருவமும் பொலிவும் கூடிவரும் வயதில் அவளே அதன் மதிப்பைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் உணர ஆரம்பித்திருக்கிறாள். அப்படி இருக்க அவள் உன்னைக் குறைத்து மதிப்பிடுவாள் என்று நீயே தப்புக் கணக்குப் போட்டு விட்டாய்.''

''மணி?''

''நீ விளையாட்டில் கெட்டிக்காரியாக இருக்கலாம். ஆனால் அவன் அறிந்ததெல்லாம் அவன் விளையாட நீ சட்டை தைப்பதும், போகும்முன் சிற்றுண்டி செய்து கொடுப்பதும் தான். நீ அழகான கற்பனைகள் செய்து கதைகள் எழுதி இருக்கலாம். ஆனால், அவர்கள் கற்பனையில் நீ அவர்களுடைய இன்பத்தையும் சௌக்கியத்தையும் வடிவம் கொடுத்து அமைப்பவள் மட்டும்தான்.''

'' ராஜி?''

''அவளுக்கு உன் ஞாபகம் மட்டும்தான். உன்னை வேறு எப்படியும் நினைக்க அவளுக்கு மனமில்லை. அதனால்தான் நீ உனக்குப் பொருந்தும் நாய்க்குட்டி அடையாளத்தைச் சொன்னதும் உன் மடியிலேயே சந்தோஷத்துடன் நாய்க்குட்டியோடு வந்து விழுந்து விட்டாள். 'எல்லோருக்கும் என்னைத் தெரிந்திருக்கிறது. ஆனால் யாரும் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை' என்று விளையாட்டில் புதிர் போட்டாயே, இப்போது தெரிந்து கொண்டாயா? எல்லோரும் உன்னைப் புரிந்து கொண்டவர்கள்தாம். அவரவர் கைக் கண்ணாடியில் அவரவர் மனத்துக்குப் பிரியமானபடி உன் உருவத்தைப் பார்க்கிறார்கள். அவ்வளவுதான்; உன் மனம் சலிக்கும் போதெல்லாம் உன் கேள்விகளையும், குழந்தைகளின் பதில்களையும் இனிமேல் ஞாபகப் படுத்திக் கொள்.''

''குழந்தைகள் இருக்கட்டும். நீங்கள்?'' என்று தன் இடையிலிருந்து அவன் கைகள் இரண்டையும் எடுத்துத் தன் கன்னங்களில் வைத்து அழுத்திக் கொண்டாள் சாந்தா.

''உன்னைக் கண்டுகொள்ள எனக்கு என்றுமே ஒரு கண்ணாடி தேவையாக இருந்தது இல்லையே?'' என்றான் சந்திரன்.





TAMIL





# பயோ-ஸால்
(கிரைப் மிக்சர்)



ஜே. & ஜே. டிஷேன்
ஹைதராபாத் - இந்தியா

---

# பாலுஸ்ரீ பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்
"பாலுஸ்ரீ பில்டிங்ஸ்"

3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414, மதராஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

மதராஸ் சிட்பண்டு 1961 ஆக்ட்படி மேற்கொண்டும் சீட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 of 1961)

**25 மாதங்கள் — குறுகிய காலச் சீட்டுகள் — 25 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200 | ரூ. 5000 | D | ரூ. 25 | ரூ. 625 |
| B | ரூ. 100 | ரூ. 2500 | E | ரூ. 20 | ரூ. 500 |
| C | ரூ. 50 | ரூ. 1250 | F | ரூ. 15 | ரூ. 375 |

**40 மாதங்கள் — நீண்ட காலச் சீட்டுகள் — 40 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500 | ரூ. 20000 |
| LTB | ரூ. 250 | ரூ. 10000 |
| LTC | ரூ. 125 | ரூ. 5000 |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் ஏஜெண்டுகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி — பம்பாய் — பெங்களூர் — கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# கொறிக்கவும் சிரிக்கவும்

கோமதி சுவாமிநாதன்

## குலப் பெருமை

புதிதாக வாங்கி யிருந்த தம் ரோல்ஸ் ராய்ஸ் காரில் லண்டனைச் சேர்ந்த ஒரு செல்வந்தர் ஸ்விட்சர்லாந்தில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். காரில் ஏதோ கடகடவென்று சப்தம் கேட்டது. உடனே அவர் அந்தத் தகவலை லண்டனில் உள்ள மோட்டார் கம்பெனிக்கு டெலிபோன் மூலம் தெரிவித்தார்.

மறு நாள் விமானம் மூலம் மூன்று சிப்பந்திகள் பறந்து வந்து காரில் தோன்றியிருந்த கோளாறை நிவர்த்தி செய்துவிட்டுத் திரும்பிப் போனார்கள்.



ஊர் திரும்பி ஆறு மாதம் ஆகியும் கம்பெனியிலிருந்து ரிப்பேருக்கான பில் ஒன்றும் வராததால் அந்தச் செல்வந்தர் நேராக ரோல்ஸ்ராய்ஸ் மோட்டார் கம்பெனிக்குப் போனார். "ஐயா! ரிப்பேருக்கான பில் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது. கணக்குப் பார்க்கிறீர்களா?" என்றார். கம்பெனி மானேஜர் கொஞ்சம் கூடச் சலனமில்லாமல், "ரோல்ஸ் ராய்ஸ் காருக்கு ரிப்பேரா? நேர்ந்திருக்காது. நாங்கள் மெக்கானிக்குகள் யாரையும் அனுப்பவில்லை. எங்களுக்குப் பாக்கி எதுவும் தர வேண்டியதும் இல்லை" என்று பதில் அளித்தார்.



## காலத்தை ஒட்டிய மாற்றம்-1

"மாப்பிள்ளை சார்! முகூர்த்த நேரம் நெருங்கிண்டிருக்கு! காசி யாத்திரை கிளம்பலாமா?"

"ஐந்து வருஷமா காசியிலே உத்தியோகம் பார்த்தும் 'போர்' அடிச்சுப் போச்சு! 'காஷ்மீர் யாத்திரை' வைச்சுக்கலாமான்னு சாஸ்திரிகள் கிட்டே கேட்டுக்கொண்டு வாங்கோ! அப்புறம் வர்றேன்."

## காலத்தை ஒட்டிய (ஏ)மாற்றம்-2

"ஹலோ! 99009 ஆ? நான்தான்...காலேஜ் பிரின்ஸிபால் கண்ணாயிரம் பேசறேன்..."

"நமஸ்காரம் சார்! குட்மார்னிங் சார்! வணக்கம் சார்! என் பையனுக்கு சீட் கொடுக்கறீங்களா சார்! இப்பவே அவனைக் கூட்டிக் கொண்டு வந்துடறேன் சார்."

"மன்னிக்கணும். எங்க வீட்டு வேலைக்காரி பொன்னம்மா உங்க வீட்டுக்கு அடுத்த வீட்டுக்கு வந்திருக்காளாம். அவளை உடனே எங்க வீட்டுக்கு அனுப்பி வைக்கிறீங்களா?"



## பட்டு மாமா பிட்டு மாமி

"இதென்ன அமர்க்களம்! பழக்கூடை, பூமாலை, பொன்னாடை எல்லாம்? உங்களுக்கு யாரும் நாற்பத்தைந்தாவது பிறந்த நாள் விழா நடத்தினார்களா?"

"காலேஜ் பியூன் கோவிந்தனுக்கு நாளைக்கு ஐம்பத்து ஒன்பதாவது பிறந்த நாள். அவனுக்குப் பொன்னாடை போர்த்திப் பூமாலை போட்டால், உன் பெண்ணுக்காகப் பிரின்சிபாலைப் பார்க்க என்னை முன்னாலே உள்ளே அனுப்புவான்."

## இரு துருவங்கள்

செங்கல்பட்டில் ஒரு உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதிய ஐம்பத்தொரு மாணவிகளும் பரீட்சையில் வெற்றி பெற்று விட்டார்கள்.

○

அதே செங்கல்பட்டில் மற்றொரு உயர்நிலைப் பள்ளியில் அதே பரீட்சை எழுதிய நாற்பத்திரண்டு மாணவர்களில் இரண்டே பேர் வெற்றி பெற்றார்கள். 'அருள் புரிந்தாய் அன்னை சாரதா மணி தேவி' என்ற பாடலும் 'போனால் போகட்டும் போடா' என்ற இசையும் அந்த சமயம் இரு பக்கங்களிலிருந்தும் ஒலித்திருக்கலாமோ?

## மலர் ஒன்று; அரும்பு வேறொன்று

"பள்ளிப்படிப்பைப் பாங்குற முடித்த இவர் அரசினர் அலுவலில் எழுத்தராகச் (கிளார்க்) சேர்ந்தார். தமக்குத் தரப்பட்ட பணியினைச் செவ்வனே விரைவில் முடித்து விடுவார். கடமையைக் கருத்தோடு கடிதிற் செய்வதுகூட அக்காலே இவருக்கும் பெருந் துன்பத்தினைத் தந்தது. இவர் பணிபுரியும் திறமை இவருக்கு மேலும் வேலைச்சுமையையே தேடித் தந்தது. ஞாயிற்றுக்கிழமைகளிலும் இரவிலும் ஓய்வில்லாத நிலைக்கு ஆளானார். இதன் விளைவு அரசாங்கப் பணிக்கு ஒரு கல்-கடிதம் (ராஜிநாமா) என்று ஆனது. பிற்காலத்தில் ஒரு பேரறிஞரெனப் போற்றப் படும் பேற்றினைப் பெற்ற இவர் நம் நாட்டின் அரசாங்கத்தில் ஓர் எளிய பணியாளராகத்தான் தொடங்கினார்."



இந்தப் பேரறிஞர் யார் என்று ஊகிக்க முடிகிறதா? முடியாவிட்டால் டாக்டர் மு. வ. அவர்களிடம் கேளுங்கள். அவர் அடக்கத்துடன் புன்னகை பூப்பார்.

## திடீர் யுகம்

"நான் கண்டுபிடித்திருக்கும் 'வெளிப்புற' ஏர்கண்டிஷனை மிஷினை எந்த இடத்தில் வைத்து முடுக்கி விட்டாலும் ஐந்து மைல் சுற்றளவுக்குத் தேவையான குளுமையோ உஷ்ணமோ கிடைக்கும்" என்றார் முதல் விஞ்ஞானி.

"இருபது சூட்டு கோட்டுகளை வைத்த பிறகும், உள்ளங்கை அகலத்திற்குள் மடக்கக்கூடிய சூட்கேஸைக் கண்டு பிடித்திருக்கிறேன்!" என்றார் இரண்டாவது விஞ்ஞானி.

"நண்பர்களே!" என்று ஆரம்பித்தார் மூன்றாமவர். "உங்கள் கண்டு பிடிப்புகள் சராசரி மனிதனின் அன்றாடத் தேவைகளுக்கு உபயோகப்படப்போவதில்லை. இதைக் கவனிக்கும்போது பரிசு எனக்குத்தான் வரும். வீட்டுள் சேர்ந்த தூசியை விளக்குமாறால் ஒதுக்கி, அதை ஒரு பாட்டிலில் நிரப்பித் தண்ணீரைத் தெளித்துக் காற்றுப் புகாமல் மூடி பிரிஜ்டையரில் ஒரு வாரம் வைக்க வேண்டும். பிறகு மூடியைத் திறந்து இரண்டு ஸ்பூன் எடுத்து வெந்நீரில் போட்டு..." அவர் தயங்கி நின்றார். மற்ற இருவரும் ஆவலுடன் ஊக்கினார்கள் உம்-உம் என்று. மூன்றாமவர் தொடர்ந்தார்: "வெந்நீரில் இரண்டு ஸ்பூன் போட்டுக் கலக்கி வடிகட்டினால் முதல் தரமான மண் கிடைக்கும்!"

"எல்லாப் பரிட்சைகளிலும் என் பையன் நம்பர் வெளியாகும், ஆனால் கடைசியில் அவன் பாஸ் செய்திருக்க மாட்டான்."

"என்ன அநியாயம்?"

"கெட்டிக்கார கிறுக்கி தன் நம்பரைத் தன் நம்பர் என்று சொல்லி விடுவான்."

## நமக்குத் தெரிந்த நாலுபேர்



ஒன்றும் தெரியாத நிலையில், தனக்கு ஒன்றும் தெரியாது என்று புரிந்துகொள்ள முடியாதவன் அறிவிலி. தவிர்க்கப்பட வேண்டியவன். ஒன்றும் தெரியாத நிலையில் தனக்கு ஒன்றும் தெரியாது என்று புரிந்து கொண்டிருப்பவன் சாதாரணமானவன். வழிகாட்டப்பட வேண்டியவன். எல்லாம் தெரிந்த நிலையில் தனக்கு எல்லாம் தெரியும் என்று புரிந்து கொள்ளாதவன் தூங்குகிறான். எழுப்பப்பட வேண்டியவன். எல்லாம் தெரிந்த நிலையில் தனக்கு எல்லாம் தெரியும் என்று புரிந்து கொண்டிருப்பவன் புத்திமான். பின்பற்றப்பட வேண்டியவன்.

— அராபியப் பழமொழி



"எல்லாச் சர்வகலாசாலைப் பரீட்சைகளிலும் என் பையன் பாஸ் பண்ணி விடுவான். ஆனால் அவன் பரீட்சை நம்பர் மாத்திரம் ஒரு பத்திரிகையிலும் வராது."

"அதென்ன மாயம்?"

"மாயமுமில்லை! மந்திரமுமில்லை. இவனுக்கு முந்தின நம்பர் உள்ள பையனும் பிந்தின நம்பர் உள்ள பையனும் பாஸ் செய்திருப்பார்கள். ஆகவே அந்த நம்பரிலிருந்து இந்த நம்பர் வரை என்று போட்டு விடுவார்கள்! என் பையன் நம்பர் அந்த 'வரை'யில் மறைந்து நிற்கும்!"





**பெட்டிக்குள் உள்ள கடிதம்**
**ரூ. 15/- பரிசு பெறுகிறது.**

**நா**ன் சென்னைக்கு வந்து மூன்று மாத மாகிறது. தெரிந்தவர்கள் வீட்டில் தங்கி யிருக்கிறேன். கடந்த ஒரு மாதமாக வீட்டுக் குள் காற்றோட்டமில்லாதபடியால் வாசல் பக்கமுள்ள திண்ணையில் படுத்துத் தூங்கு வது என் வழக்கம். இரண்டு நாட்களுக்கு முன் இரவு இரண்டு மணி சுமாருக்கு நான் நன்றாக அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த சமயத்தில் இரண்டு போலீஸ்காரர்கள் என்னைத் தட்டி எழுப்பி என்னென்னவோ கேள்விகள் கேட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டு போய், சந்தேகக் கேஸ் என்று 'புக்'செய்து லாக்கப்பில் வைத்துவிட்டார்கள். வீட்டுக் காரர்களை எழுப்பி விசாரித்துக்கொள்ளும்படி நான் எவ்வளவோ மன்றாடிக் கேட்டுக்கொண் டும் அவர்கள் என் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கவில்லை. மறுநாள் காலையில் எனக்குத் தெரிந்தவர்களுக்குத் தகவல் சொல்லி அனுப்பு வதற்குக்கூட அவர்கள் சுலபத்தில் என்னை அனுமதிக்கவில்லை. ஒருவாறு தகவல் கொடுத்து, அவர்கள் வந்து என்னை ஜாமீனில் அழைத்துக் கொண்டு போவதற்குள் நான் பட்ட பாடு...! —என்போன்ற ஓரளவு விவரம் தெரிந்தவர்களுக்கே இந்த நிலை என்றால், ஒன்றுமறியாத அப்பாவிகளின் நிலைமையைப் பற்றிக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடிய வில்லை.

சட்டத்தையும், ஒழுங்கையும் நிலைநாட்டு வது அவசியம்தான்! இருந்தாலும் பொறுப்பு வாய்ந்த ஊழியர்களும் அதிகாரிகளும் ஓரள வுக்கு மனிதாபிமானத்துடன் நடக்கவேண்டும்.

சென்னை—34
31—5—70

''அனுபவித்தவன்''

**தி**ருவள்ளுவர் உருவப் படத்துடன் ஒரு குறட் பாவையும் தமிழ்நாடு அரசு பஸ்களில் எழுதி ஒரு நல்ல திட்டத்தைச் செய்தது அரசு. ஆனால் இந்தத் திட்டம் சரியாக அமுலாக்கப் படாததைக் கண்டு உள்ளம் வருந்துகிறது. சில பஸ்களில் திருவள்ளுவர் உருவப் படம் மட்டும் உள்ளது; குறட் பாவைக் காணோம். குறட் பா உள்ள இடத்தில் உருவப்படத்தைக் காணோம். சில பஸ்களில் இரண்டுமே காணா மல் அதற்கென்று ஒதுக்கப்பட்ட — டிரை வருக்கு முன்னால் உள்ள பகுதி வெறிச்சென்று காணப்படுகிறது.

'செய்வன திருந்தச் செய்' என்ற பொன் மொழியைப் போக்குவரத்துத் துறையினர் கவனிப்பார்களா?

சென்னை—56
22—5—70

வி. ச. வாசுதேவன்

**மா**ம்பலம் ரெயில்வே நிலையத்தில் சில சமயம் பயணச் சீட்டுகள் அன்றையத் தேதி முத்திரை யின்றிக் கொடுக்கப்படுகின்றன. சென்ற மாத முதலில் கிரோம்பேட்டை சென்ற எனக்கும் தேதி முத்திரையின்றி டிக்கெட் கொடுக்கப்பட்டது. என்னைப் போலவே இன்னொருவர் வாங்கிய பயணச் சீட்டிலும் தேதி பொறிக்கப்படவில்லை. நடு வழியில் பரிசோதகர் அப்பயணச் சீட்டில் தேதி இல்லாமல் போகவே அவரிடம் அப ராதத் தொகையைப் பெற முயன்றார். எவ்வளவு சொல்லியும் கேளாமல் அவரைத் தாம்பரம் வரை அழைத்துச்சென்று அபராதம் வாங்கினார்கள். டிக்கெட் கொடுப்பவர் இழைத்த தவற்றுக்கு வாங்கியவர் பலியானார்!

சென்னை-44
6—6—'70

ம. க. சுந்தரராசன்

**நா**ன் காஞ்சீபுரத்தில் ஏறத்தாழ இரண்டு வருடங்களாகச் செய்தித் தாள் விநியோகிக்கும் தொழிலில் இருக்கிறேன். சென்ற இரண்டு வருடங்களாகச் சைக்கிள் களுக்கு ஆறு மாதத்துக்கு ஒரு முறை வரியாக ரூ. 1.12 வீதம் பெற்றனர். 1970 முதல் மேற்கண்ட சைக்கிள் வரி ரத்து செய்யப்பட்டது. இது குறித்துச் சந்தோஷப் பட்டேன். ஆனால் இப்போது முன்பு இருந்த வரியே தேவலை என்றாகிவிட்டது.

வருடா வருடம் எங்கள் ஊரில் ஏகாம்பரநாதர் உற்சவமும், வரதர் கோவில் உற்சவமும் நடைபெறுவது வழக்கம். அதுபோல் இந்த வருடமும் நடைபெற்றது. எங்கள் ஊர் நகராட்சி மன்றம் காஞ்சி நகர எல்லைகளை யெல்லாம் குத்தகைக்கு விட்டது. குத்தகைதாரர்கள் அந்த வழியாகப் போகும் சைக்கிள்களுக்குத் தினம் ஆறு காசு வீதம் இருபது நாட்களுக்கு வசூல் செய்தார்கள். இச்செய்கை என் போன்றவர்களுக்கு எப்படிப் பயனளிக்கும்? ஏன் இவ்வாறு செய்கிறீர்கள் என்று கேட்டால் கோயில் திருவிழாவுக்கு ஏற்படும் செலவை ஈடு செய்ய இது பயன் படுகிறது என்கிறார்கள். ஆண்டவன் ஏழைகளை வருத்தியா திருவிழாக் கொண்டாட நினைக்கிறான்? சைக்கிள் வரியை ரத்து செய்து விட்டோம் என்று சொல்லி இப்போது புது வித வரியைப் புகுத்தி யிருக்கிறார்கள். இது என்ன நியாயமோ?

காஞ்சீபுரம்,
29—5—70

ஆர். இராமகிருஷ்ணன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam




பாதுகாப்பிற்கு
ஒரு பூட்டு உள்ள
தெனில் அது
நவ-தால் ஒன்றே
ஒன்றுதான் !

# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற்சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப்பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற்கேற்ற முறையில் செய்யப்பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்குகிறது. தயாரிப்பவர்கள்: கோத்ரெஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்பதில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடையவர்கள்.

4 சைஸ்கள் :
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் நம்பகரமான பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon